உ
ஓம் தத் சத்

## ஜகத்குரு ஸ்ரீஆதி சங்கராச்சாரிய ஸ்தாபிதம்
## கைலாச சம்பத்கிரி பிரம்ம பீடம்
## ஸ்ரீமத் சற்குரு அமலானந்த சுவாமிகள்



# குருபூஜை பெருவிழா
## 67-ம் ஆண்டு நினைவு மலர்

நிகழும் ஸ்ரீ ஹேவிளம்பி வருடம் ஆவணி 9ம் தேதி **(25.8.2017)** அஸ்த

# ரிபு கீதை
(ஸ்வய ஞானாநுபவம் என்னும் பாடல்கள் தொகுப்பு

வெளியீடு:
சத்குரு ஸ்ரீமத் அமலானந்த ஞானபீடம், சென்னை-600 015.



## ஸ்ரீமத் சுந்தரானந்த சுவாமிகள்

தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருஉரு சிந்தித்தல் தானே.

- திருமந்திரம்



## ஸ்ரீமத் கேசவானந்த சுவாமிகள்

தன்னை அறிந்திடும் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பர்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனரு ளாலே

- திருமந்திரம்



## ஸ்ரீமத் லக்ஷ்மணானந்த சுவாமிகள்

திடஞானி தெரிசனமே தீர்த்த மாடல்

திடஞானி தெரிசனமே தேவபூஜை

திடஞானி தெரிசனமே ஜெபதபங்கள்

திடஞானி தெரிசனமே செய்யுமறங்கள்

திடஞானி தெரிசனமே சிவத்தைக் காணல்

திடஞானி தெரிசனமே சிவத்தின் சேவை

திடஞானி தெரிசனமே மேவுவதற்குத்

திரிவிதமா உலகத்தில் அரிதாம் யார்க்கும்

- ரிபு கீதை

Printed by: Nandhi Offset Printers, Chennai - 5. ✆ 9791193093



## ஸ்ரீமத் சுந்தரானந்த சுவாமிகள்

தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருஉரு சிந்தித்தல் தானே.

- திருமந்திரம்

19-5

# குருபூஜை பெருவிழா

## 67-ம் ஆண்டு நினைவு மலர்

நிகழும் ஸ்ரீ ஹேவிளம்பி வருடம் ஆவணி 9ம் தேதி **(25.8.2017)** அஸ்த நட்சத்திரம்

# ரிபு கீதை

(ஸ்வய ஞானாநுபவம் என்னும் பாடல்கள் தொகுப்பு

## பதிப்புரை:

சற்குரு ஸ்ரீமத் அமலானந்த சுவாமிகளின் 67ஆம் ஆண்டு குருபூஜைப் பெருவிழாவின் போது சாதகர்களுக்கு பயனளிக்கும் வண்ணம் வேதாந்தக் கருத்துக்கள் அடங்கிய ஸ்வய ஞானாநுபவம் பாடல்கள் தொகுப்பு, ரிபுகீதையிலிருந்து எடுத்து பதிப்பிக்கப்படுகிறது.

திருவருளாலும், குருவருளாலும் மெய்யன்பர்கள் அனைவரும் இப்பாடல்களைப் படித்து, உணர்ந்து, சர்வ துக்க நிவர்த்தி பரமானந்த பிராப்தியான மோக்ஷத்தை அடையப் பிரார்த்திக்கிறேன்.

இங்ஙனம்,

**M. மேகநாதன்**
சற்குரு ஸ்ரீமத் அமலானந்த ஞானபீடம்
சென்னை-600 015.
98841 35276



27188

ஓம் தத் சத்

பரப்பிரஹ்மணே நம:

## இறைவணக்கம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞான குரு வாணியை யுள்நாடு.

## குரு மரபு வணக்கம்

பெருமைபெறு கைலாச சம்பத் கிரிப்
பிரமபீடத் தருட்பெரு மாதிசங்கரர் வழிப்
பேசருநி ஜானந்தர் அச்சுதா னந்தரும்
பிறங்கு வேதாந்த முடிவின்
பொருநிலையி னுருவாய சகஜனிட்டானந்த
போதவா தவனாய சீர்
பொருவில்கங் காராமெனுஞ் ஜீவமுக்தனும்
போற்றுவே தாந்த வித்வ
தருவனைய விமலபர துரிய மெய்ஞ்
ஞானியாய்ச் சாரீரா ஜானந்தரும்
தண்டலை யுடுத்துபுக ழெண்டிசை
பரந்தழகு தாவுதிரு நாகவேட்டுப்
பொருவற்ற தவராஜ சிங்கமாய் வந்தெமைப்
புன்மைதீர்த் தாண்டருள் செய்யும்
புகலும த்துவிதவம லானந்த மெஞ்ஞானி
பொன்னடிக் கேடுணை துணையரோ.

## குரு துதி

தாயினும் இரங்கி எந்தனை வந்தாண்டருள்
தூயவன் சரணமே சுமக்க என்றலை
வாய் துதிசெயக் கரமலர்கள் துய்த்தொழ
நேயமோடு அனுதின நினைக நெஞ்சமே.

19-5

## குரு துதி

நானிவன்றா னவனென்றே நவின்றறியா தேயுழன்ற நாயினேற்குத்
தானமரு நிலையிதுவே தாந்தவுப சாந்தமிது தானே தானா.
மோனமொழி யிதுவென்று நான் மறையிநுப நிடதமொழி முடிவு காட்டும்
ஞானகுரு தேசிகனை நாவகத்தும் பாவகத்தும் நவிற்று வோமே.

## சொரூபஸ்துதி

உரியமறை யுபநிடத மாவாக் யங்கள்
உட்கருத்தி னிலக்கியார்த்த வுண்மை நன்றாய்த்
தெரியசதா நிட்டையினைப் புரிந்த கண்ட
செல்வமுறுஞ் சீரியராம் பயிர்த ழைப்பக்
கரியமுகி லினங்கலந்து வருஷித் தாற்போல்
கருணையுட னானந்த மாரி பெய்யுந்
துரியபரஞ் சுடருருவாய்த் துலங்குஞ் சோதிச்
சொரூபமதைப் புறத்தகத்துந் தொழுதுய் வாமே.

## பொருள் வணக்கம்

உலகமுதற்பொருளை உம்பர்க்கு உணர்வரிதாம் பொருளை
ஓதிய வேதாகமத்தின் உச்சியினுட்பொருளை
பலகலை பொருள்முடிவின் முடிவான பொருளை
பற்றறபற்றிய பெரியோர் பரவிய வான்பொருளை
அலைதிவலை நுரை கடலில் உதித்துஒடுங்குமாபோல்
அகிலாண்டம் உதித்துஒடுங்கும் அதன் மூலப்பொருளை
இலகிய சற்குருவாகி யானாகும் அப்பொருளை எங்குமாம்
பரம்பொருளை யாமும் ஏத்துதுமே.

பாடல் : 1

சுத்தசிதா காயமதாய் எந்த வஸ்து

சுதந்திரமாய் தமதுபர சக்தியோடு

பக்தரெல்லாம் உய்யும் வண்ணம் கருணையாலே

பரதத்வ வடிவாக திரண்டெழுந்தே

அத்வைதானந்தம் உணர அனுபவத்தின்

அதிசயமிங்கு எல்லோரும் அறியும் வண்ணம்

நித்தமுமே ஆனந்த நடனம் செய்யும்

நிதம்அந்த வஸ்துவினை நினைவில் வைப்போம்!

பாடல் : 2

அறிவுருவாய் அமைவுற்ற ஆன்மா தானே

அழியாமல் இருப்பதனால் சத்தும் ஆகும்

அறிவுருவாய் அமைவுற்ற ஆன்மா தானே

அனைத்தையுமே விளக்குவதால் சித்தும் ஆகும்

அறிவுருவாய் அமைவுற்ற ஆன்மா தானே

அகிலர்க்கும் பிரியமதால் சுகமும் ஆகும்

அறிவுருவாய் அமைவுற்ற ஆன்மா தானே

அந்தம்இல்லா திருப்பதனால் அனந்த மாமே!

கருத்து:

சத் சித் ஆனந்தம்.

19-5

பாடல் : 3

ஆன்மாவில் கற்பிதமாய் காண்ப தெல்லாம்

ஆன்மாவுக்கு அயலாக என்றும் இல்லை

ஆன்மாவுக்கு அயலாக பிரம்மம் இல்லை

அப்பிரம்மம் தமக்கு அயலாக ஆன்மா இல்லை

ஆன்மாவே பிரம்மமதாம் பிரம்மம் தானே

ஆன்மாவாம் அணுவும் இதில் ஐயமில்லை

ஆன்மாவாம் அகம்பிரம்மம் என்று எப்போதும்

ஆன்மபர ஐக்கியமே அறிய வேண்டும் !

கருத்து:

ஆன்ம பர ஐக்கியம்.

பாடல் : 4

விரிந்தஜகத் காரணமாம் விதிஇல்லா ததால்

விசித்திரமாய் பகுப்புற்ற ஜகத்தே இல்லை

தரந்தரமாம் ஜகத்தில்லா தன்மையினால்

தயங்கும்ஜகத் பாலகனாம் ஹரியும் இல்லை

பொருந்தும் சராசரம் எவையுமிலா மையாலே

புகலும்ஜகன் நாசகனாம் ஹரனும் இல்லை

நிரந்தரமாய் நிறைவுற்ற ஆன்மா ஒன்றே

நிச்சலமாய் நிலைத்ததென நிச்சயிப்பாய்!

கருத்து:

ஜக, ஈச, பர ஐக்கியம்.

பாடல் : 5

அந்தமில்லாத் தன்மையினால் ஆதிஇல்லை

ஆதியில்லாத் தன்மையினால் அந்தம் இல்லை

சொந்தம்இல்லாத் தன்மையினால் தோற்றம் இல்லை

தோற்றம்இல்லாத் தன்மையினால் சொந்தம் இல்லை

பந்தம்இல்லாத் தன்மையினால் வீடும் இல்லை

பரவிய வீடின்மையினால் பந்தம் இல்லை

சந்ததமும் சின்மயமாம் ஆன்மா ஒன்றே

சலியாத வஸ்துவென நிச்சயிப்பாய்!

கருத்து:

அந்தம், ஆதி, சொந்த பந்தம், வீடும் இல்லை.

பாடல் : 6

பயன் எவையும் விரும்பாமல் பலஜன்மத்தில்
    பழுதறவே அனுஷ்டித்த அறங்களாலே
அயல்அணுவும் மருவாமல் மனதின் சுத்தி
    மன்னியதால் சாதனம் ஓர்நான்கும் பெற்றோர்
இயல்புடனே இயற்றியிடும் சிரவணாதி
    ஏதுவினால் பரப்பிரம்ம ஞானம் பெற்று
அயல்அணுவும் அணுகாத அகண்டமான
    அத்வைத பரப்பிரம்மம் ஆவரன்றே!

**கருத்து:**

முன் ஜன்ம தர்மம், இந்த ஜன்மாவில் செய்த சத்கர்மா, ஓர்மை பக்தி, நம்பிக்கை, வைராக்கியம், விசாரஞானம் ஆகிய ஆறினாலும் ஆத்மஞானம் சாத்தியமாகும்.

பாடல் : 7

இத்துவைத ஜகத்தெவையும் விவகாரத்தில்

யாவர்க்கும் எதிராகத் தோற்றலாலே

சித்தினது விவர்த்தமதாம் சித்தம் தானே

ஜகமெனத் தோற்றுகின்றதெனச் சிலபேர் சொல்வர்

சித்தமதை நன்றாக விசாரிக்கும் கால்

சின்மயமாம் பிரம்மமல்லால் இலவே இல்லை

புத்திரனே! ஆதலினால் எக்காலத்தும்

பூரணமாய் உளது பரப்பிரம்மம் ஒன்றே!

கருத்து:

சித்தே சித்தமாக தோற்றுகிறது.
சித்தம் ஜகமாக தோற்றுகிறது.
இது விகார விவகாரமேயன்றி உண்மையில்லை.

பாடல் : 8

புத்தியினால் உறுதியிடும் பொருளும் இல்லை

புரைமனதால் மனனமிடும் பொருளும் இல்லை

சிந்தையினால் சிந்திக்கும் பொருளும் இல்லை

செறிவாக்கால் வசனிக்கும் பொருளும் இல்லை

சொந்தமதாய் தோற்றியிடும் பொருளும் இல்லை

துவைதத்தால் தொடர்கின்ற பயமும் இல்லை

சந்ததமும் சன்மாத்ர சுபாவமாகி

சலியாமல் உளது பரப்பிரம்மம் ஒன்றே!

கருத்து:

மனம், புத்தி, சித்தத்தால் தோற்றும் எப்பொருளும் பிரம்மத்திற்கு அன்னியமில்லை.

பாடல் : 9

நினைவெதுவோ அதுதானே ஜீவனாகும்

நினைவெதுவோ அதுதானே ஈசனாகும்

நினைவெதுவோ அதுதானே ஜகமும் ஆகும்

நினைவெதுவோ அதுதானே மனதும் ஆகும்

நினைவெதுவோ அதுதானே காமம் ஆகும்

நினைவெதுவோ அதுதானே கர்மா ஆகும்

நினைவெதுவோ அதுதானே துக்கம் ஆகும்

நினைவெதுவோ அதுதானே அனைத்து மாகும்!

கருத்து:

நினைவு அதாவது எண்ணம் அதாவது கற்பனை ஆகிய இவைகள் தோன்றினால் அனைத்தும் பொய்யே. துக்கமே.

பாடல் : 10

நினைவின்றி நிற்பதுவே அகண்டமாகும்

நினைவின்றி நிற்பதுவே நிஷ்டையாகும்

நினைவின்றி நிற்பதுவே ஞானம் ஆகும்

நினைவின்றி நிற்பதுவே மோட்ஷமாகும்

நினைவின்றி நிற்பதுவே சகஜ (ஞான)மாகும்

நினைவின்றி நிற்பதுவே பிரம்மமாகும்

நினைவின்றி நிற்பதுவே சிவமும் ஆகும்

நினைவணுவும் இல்லை எல்லாம் பிரம்மம் தானே!

கருத்து:

மனோமய எண்ணம் அதாவது நினைவு அதாவது கற்பனை இல்லையானால் நாம் அதுவாகவே இருப்போம். எல்லாம் பிரம்மமே!

பாடல் : 11

திருசியமே ஒன்றுமில்லாத் திருக்கே யாகி

இயங்கும்மனோ விகற்பமில்லா நிலைநின்றோர்க்கு

மருவியிடும் நனவுகனாச் சுழுப்தி இல்லை

மரணமில்லை உய்வதில்லை மற்றொன்றில்லை

பிரிவறவே மனது வெறித்திருக்கும் நிஷ்டை(யின்)

பெருமையினை யென்சொல்வோம் என்றிவ்வண்ணம்

பரிவுடனே ரிபுமுனிவன் நிதாகனுக்கு

பரமார்த்த உறுதியினைப் பகர்ந்தானன்றே!

கருத்து:

காண்பான், காட்சி, சாட்சி, எழுச்சி இல்லா நிலை நின்றோர் பெருமையை தேவர் மூவரும் சொல்ல முடியாது !

பாடல் : 12

எள்ளளவும் அயலின்றி எல்லாம் என்றும்

ஏகபரப் பிரம்மமதாய் யிருந்த போதும்

கள்ளமுறும் மனதுடையோர் பரசிவத்தின்

கருணையில்லா குற்றத்தால் வேறு வேறாய்

உள்ளமதில் உணர்ந்து மகாபவ துக்கத்தை

உறுவதனால் முமுட்சுவெல்லாம் எவ்விதத்தும்

தள்ளவொண்ணா பரமசிவம் கருணை பெற்றே

தமது பவதுக்கத்தைத் தவிர்க்க வேண்டும்!

கருத்து:

பக்தி இல்லா மூடர்க்கு ஞானம் லபிதமாகாது.

இறை கருணை இல்லாதார்க்கு துவைதமாகவும், மனதைத் தூண்டும் பேதமாகவும், இல்லாதது இருப்புடையது போலவும் தோற்றும்.

பாடல் : 13

சித்தமென வொருபொருள் இங்கு உள்ளதென்று

சிறிதேனும் சிந்தித்தால் உடனே சித்தே

சித்தமதாய் தோன்றியிடும் அதுவே ஜீவ

ஜகபரமாய் தோன்றுவதால் துன்பம் உண்டாம்

புத்திரனே! ஆதலினால் சித்தம் என்றோர்

பொருளொன்றும் இல்லை எல்லாம் சித்தேயென்றும்

இத்திறமாம் உறுதியினால் சித்தம் தன்னை

எளிதாக ஜெயித்தென்றும் இன்பம் சார்வாய்!

கருத்து:

சித்தத்தை எந்த வினாடியும் சிவமாக வைத்துக் கொண்டால் துன்பம் இல்லை. என்றும் ஆனந்தமே.

சித்தமே ஜகபர ஜீவனாக தோற்றும். சித்தம் தனியாக இல்லை. சித்தே சித்தமாக தோற்றுகிறது.

பாடல் : 14

நரர் சுரராய் திரியக்காய் நகவனாதி

நாநாவாய் நாடியிடும் நாட்டமெல்லாம்

தெரிவுருவாய் திகழ்கின்ற தேவதேவன்

திருவுருவே என்று திடத்தியானம் செய்து

இருகுணமும் இழந்து அமலசத்வம் மேலாய்

இருக்கின்ற சூட்சும மனோவிருத்தி கொண்டே

பரமசிவம் பரிபூரண சொரூபம் தன்னை

பார்த்திடலாம் மற்றொன்றால் பார்க்கவொண்ணா!

கருத்து:

அனைத்து ஜீவகோடிகளிலும் இறைவன் பரிபூரணமாக நிறைந்து இருக்கின்றான் என்ற அபேத திருஷ்டியில் பார்த்தால் அந்த இறைவனை நேருக்கு நேராக காண முடியும்.

பாடல் : 15

மித்தையென்னும் சித்தமுமே என்றும் இல்லை

மிகப்பொய்யாம் ஜகமுதலும் மென்றுமில்லை

மித்தையென்னும் வார்த்தையுமே யென்றுமில்லை

மிகமிகவும் மூடரென்னும் ஜனமும் இல்லை

சத்தியசித் சுகபரமே எல்லாம் என்றும்

சந்ததமும் அப்பிரம்மம் நாமே என்றும்

இத்திறமே திடமான முயற்சியோடு

எப்போதும் சிந்தித்து சாந்தனாவாய்!

கருத்து:

எண்ணம், சொல், செயல் இவற்றினால் அனைத்தும் அப்பரமே, அது நாமே என உறுதியோடு சித்தம் வெல்வாய்.

பாடல் : 16

அன்னியமாய் காண்பதெல்லாம் பிரம்மமாத்ரம்

ஆதலினால் உளதுபரப் பிரம்மம் ஒன்றே

இந்தவிதம் இருந்திடினும் உனக்கிப் போதிங்கு

இயம்பியிடும் குருசீடன் உலகமாதி

பின்னமெனத் தோற்றியிடும் இப்பேதமெல்லாம்

பிரம்மமென்றும் அப்பிரம்மம் நாமேயென்றும்

உற்றதிட பாவனையால் மனதை வென்று

மஹத்தான பிரம்மமதாய் சாந்தனாவாய்!

கருத்து:

அனைத்தும் அந்த ஒன்றாக இருந்தாலும் விவகாரத்தில், சொல்லும் குருவாக யாமும், கேட்கும் சீடனாக நீயும், பார்க்கும் உலகமாக ஜீவர்களும் பேதமாகத் தோன்றினாலும், உன்னுடைய ஆத்ம பாவனையினால் நீ அதுவாகி சாந்தனாவாய்!

பாடல் : 17

நில்லாமல் எங்கும்ஓர் நிறைவாய் நின்ற

நிகில பரிபூரணமாம் பிரம்ம ரூபம்

அல்லாமல் ஓரணுவும் எங்கும் இல்லை

அகிலமுமே அகண்ட பரப்பிரம்மமேயாம்

எல்லாமும் பரப்பிரம்மம் நாமே என்றிங்கு

எப்போதும் பாவித்து மனதை வென்று

சொல்லாலும் சொல்லவொண்ணா பரமே யாகிச்

சும்மாவே இருந்து மஹாசாந்தி யாவாய்!

கருத்து:

ஊசி நாட்ட இடம் இல்லாமல் அந்த ஒன்றே எங்கும் நிறைந்து இருக்கிறது.

''அது நாமே''

என பாவித்து பாவித்து பொல்லாத மனதை வென்று பேசாத, எண்ணாத மௌனமாய் சும்மாவே இருந்து சாந்தனாவாய்!

பாடல் : 18

அறைந்த பொருள் அனைத்தையுமே வாக்குமாத்ரம்

ஆக்காமல் ஆதரவாய் மனதில் கொண்டு

செறிந்த மனதொருமையுடன் எல்லாம் என்றும்

சின்மயமாம் பரப்பிரம்மம் அதுநாம் என்றே

நிறைந்த பரபாவனையால் மனதை வென்று

நிச்சலனாய் எப்போதும் சாந்தனாவாய்

அறைந்த தெல்லாம் சத்தியமே ஐயம் இல்லை

அகண்ட பரசிவம் ஆணை ஐயமில்லை!

கருத்து:

வாய் ஞானம் இல்லாமல் உணர்வான அனுபவ ஞானமாக இருந்தால் மனம் மஹத்தாகும்.

நீயும் மஹத்தாகவே இருப்பாய்.

இது எம் குருதேவராகிய சிவம் மீது ஆணை!

பாடல் : 19

தீங்கான சித்தமுதல் எவையுமில்லை

திருசியமாய் தெரிகின்ற ஜகமும் இல்லை

அகங்காரம் முதலியதோர் அணுவும் இல்லை

அகிலமுமே அகண்டபரப் பிரம்மமேயாம்

நீங்காமல் எங்கும் ஓர் நிறைவாய் நின்ற

நிமல அறிவான பரம் நாமே என்று

தூங்காது தூங்கும் நிலை கிட்டும் மட்டும்

தொடர்பாக சிந்தித்து சாந்தனாவாய் !

கருத்து:

தீங்கு செய்யக்கூடிய காட்சியோ, கேள்வியின் மருட்சியோ, அபிமான அகங்காரமோ எங்கும் என்றும் இல்லை.

அந்த ஒன்றில் நிலைபெற்று அரிதுயில் கொள்ளும் வரை சிந்தித்து சிந்தித்து சாந்தமாவாய் !

பாடல் : 20

மனந்தனினால் செய்ததுவே செய்ததாகும்

மற்றொன்றால் செய்ததெல்லாம் செய்ததாகா

தினம்தினம் திடமான மனதினாலே

திருசியமாய் காண்பதெல்லாம் திருக்கேயான

அனந்தபரப் பிரம்மமென்றும் அதுநாம் என்றும்

அகண்டபர பாவனையே செய்வாயானால்

கனந்தரும் அப்பாவனையால் மனதை வென்று

கலங்காமல் எப்போதும் சாந்தனாவாய் !

கருத்து:

மனதின் (எண்ணத்தின்) செயலே செயலாகும். தூலத்தின் செயல் (பிராரப்த) கர்மாவர்கும்.

''அது நாமே, நாமே அது''

என்ற உண்மையில் நிலைத்து காண்பன அனைத்தும் அதுவாக காணப்பழகினால் மனம் மஹத்தாகும். நீயும் மஹத்தாகவே இருப்பாய். அதுவே சாந்தியாகும்.

பாடல் : 21

மனததுதான் அவிசார தசையில் மைந்தா

மயக்கமுறும் ஜகமுதலாய் தோற்றினாலும்

மனதுருவை மாறாது விசாரம் செய்தால்

மற்றதுதான் மஹத்தான சித்தே ஆகும்

மனததனை எளிதாக ஜெயித்து எப்போதும்

மஹத்தான சித்துருவே ஆகவேண்டி

மனதுமுதல் எல்லாம்சித் அதுநாம் என்றே

மாறாது சிந்தித்து சாந்தனாவாய்!

-40-

கருத்து:

உடல், உலக பொருள்கள் (நாம ரூபத்தோடு) சம்பந்தம் இல்லாமல் சிந்திக்கின்ற சித்தத்தை சித்தாக்கி, அந்த சித்தாகிய ஆத்மா நாம் என விடாமல் சிந்தித்தால் நாம் அதுவான ஆத்மஸ்வரூபம் ஆவோம்.

பாடல் : 22

மனதென்றும் வாக்கென்றும் மற்றதென்றும்

மருவிய இப்பேதமுமே எமக்கிங் கில்லை

கனவிலுறும் பொருள்களில் எப்பொருள்களேனும்

காண்கின்ற தமக்கயலாக கண்டதுண்டோ?

நனவிலுறும் பொருள்களும் அவ்விதமே யாக

நாடியிடும் ஞானவடிவான நாமே

எனும்உரமாம் பாவனையால் மனதை வென்று

ஏகபர வடிவாகி சாந்தனாவாய்!

**கருத்து:**

எண்ணம், சொல், செயல் இவைகள் எமக்கில்லை. கனவில் காணக்கூடிய வஸ்து எப்படி மித்தையோ அதே போல் நனவில் காணக்கூடியதும் மித்தையே.

கனவின் தோற்றம் உள்ளே.

நனவின் தோற்றம் வெளியே.

இரண்டும் பொய்யே. இவைகளுக்கு அதிஷ்டானமாகிய

பாடல் : 23

மனோஜயமே திடமாக மன்னு மட்டும்
மற்றுள்ள வியாபாரம் அனைத்தும் விட்டு
வினோதமதாய் யாவும்சித் அதுநாம் என்றே
விருப்பமுடன் விடாதுமிகச் சிந்தை செய்தால்
மனோஜயமாய் மஹத்தான அறிவு உதிக்கும்
மற்றதனால் ஜகம் முதலாம் இருள் இறக்கும்
இனோதயமே ஆகியிடின் இருள் எங்கேனும்
இருப்பதனை யாரேனும் கண்டதுண்டோ?

கருத்து:

உலக நாம ரூப வஸ்துக்களை நான். எனது என்ற உடமை பாராட்டாமல்

''எல்லாம் ஒன்றே, அது நாமே''

என தைலதாரை போல் சிந்தித்து வந்தால் அஞ்ஞான இருள் ஓடிவிடும்!

பாடல் : 24

ஆதலினால் அமலமான மனதினாலே

அனவரதம் பரப்பிரம்ம விசாரம் செய்து

போதகன பரப்பிரம்மம் தானே எல்லாம்

பூரணமாம் பரப்பிரம்மம் அதுநாம்என்று

சாதகமாம் பாவனையை திடமாய் செய்து

சஞ்சலமாய் உளமனதை நன்றாய்வென்று

ஜோதிமிகும் பரப்பிரம்மம் தாமே யாகி

சும்மாவே இருந்து மஹாசாந்தி யாவாய் !

கருத்து:

கத்தி முனையில் நடப்பது போன்று அதிஜாக்ரதையுடன் உடல் உலக பாவனையில் மனம் செல்லாமல் காண்பது, கேட்பது, நுகர்வது, சுவைப்பது, ஸ்பரிசிப்பது அனைத்திலும் அந்த ஒன்றே இருக்கிறது ;

''அதுவே நாம்''

என மஹாமௌனமாக சும்மா இருக்கின்ற நிலை பெறுவாய்!

பாடல் : 25

அனக அறிவான பரப்பிரம்மம் தானே

அவித்தையினால் அசைவுறுமேல் மனதாய் தோன்றும்

வினவும் அறிவான பரப்பிரம்மம் தானே

வித்தையினால் அசைவறுமேல் பரமேயாகும்

மனததுவும் சலனமுடன் இருக்குமாகில்

மஹத்தான ஜீவபர ஜகமாய் தோற்றும்

மனததுவே சலனமில்லா திருக்கு மாகில்

மாசற்ற அறிவான பரமேயாகும்!

கருத்து:

மனம் சலித்தால் உலகமும், உலக வஸ்துக்களும் தோற்றும்.

மனம் சலனமற்றால் அனைத்தும் பரமாகவும், அது நாமாகவும் தோற்றும்.

பாடல் : 26

தனதுமன முயற்சியினால் பிரம்மாப் யாசம்

தவிராதுசெய்து மனோஜயம் பெற்றோர்க்கே

அனையபர உணர்வு எளிதாய் உதிக்குமன்றி

அன்னியருக்கு எளிதாக உதியாதென்றும்

சொன்னஉணர்வு சுகம்நல்கும் துயரைத் தீர்க்கும்

சுபத்திற்கும் சுபமாக்கும் சுலபமாகும்

ஜனனமுதல் விகாரமெல்லாம் தவிர்த்து தன்னை

சத்தியசித் சுககனமாம் பரமேயாக்கும்!

கருத்து:

தைலதாரை போல் இடைவிடாது

''அது நாமே, நாமே அது''

என்ற பிரம்மாப்பியாசம் செய்பவருக்கு பூரண ஞானம் எளிதாய் சகஜமாய் கிடைக்கும். பிரம்மானந்தம் பெருகும். துக்கம், கவலை, பயம் அங்கு இராது.

பாடல் : 27

கனவினிடைத் திருசியமாய்க் காணப்பட்ட

கடபடமே முதலியவும் மித்தையே போல்

நனவினிடைத் திருசியமாய் நாடப்பட்ட

நாநாவாம் ஜகஜீவ பரமும் மித்தை

அனைய தெல்லாம் அறிகின்ற திருக்கேயான

ஆன்மாவுக் கபின்னமதாம் பிரம்மம் ஒன்றே

அனவரதம் அழியாத உண்மை வஸ்து

அறைந்ததிலோர் அணுவேனும் ஐயமில்லை!

கருத்து:

கனவில் காண்பதும், நனவில் தேடுவதும் அனைத்தும் பொய்யே.

இதை சாட்சியாக அறிகின்ற ஆத்மாவாகிய பிரம்மம் ஒன்றே உண்மை.

''அதுவே நாம், நாமே அது ''

என பிரமாணமாகச் சொல்கிறோம்!

பாடல் : 28

வருத்தம் இல்லாதிருக்கையிலும் வருத்தம் போல

வழுவுற்ற மாபாவி மனதில் தோன்றும்

விருத்தமதாம் பாவமெல்லாம் வீந்து மெத்த

விமலமதாம் மனதுடையோர்க்கு இவ்வப்பியாசம்

கருத்திலுற மிகஎளிதாம் ஆதலாலே

கலங்காமல் எப்போதும் ஞானப்பியாசம்

திருத்தமுறச் செய்வோருக்கு தேவதேவன்

திருவருளால் திடஞானம் திகழுமன்றே!

கருத்து:

உலக உடல் பொருள்கள் நாட்டத்தில் பதிந்த மனம் ஈயைப் போல அதையே நாடும். அதனால் கலக்கம்,பயம் தோற்றும். முழுமையான முயற்சியோடு

''அதுவே நாம், நாமே அது''

என தேனீயைப் போல் அமர்ந்தால், அந்த ஒன்றே தம்மை விளக்கிக் காட்டும். இது உறுதி!

பாடல் : 29

கல்லாத கல்வியெல்லாம் கற்றபோதும்

கலக்கம் இல்லாப் பரப்பிரம்ம ஞானம் ஒன்றை

அல்லாது பவபீதி விடுக்க வொண்ணா

ஆதலினால் ஆதரவாய்நீ எப்போதும்

எல்லாமே பிரம்மமென்றும் அதுநாம் என்றும்

ஏகமதாம் பரப்பிரம்ம ஞானம் பெற்று

பொல்லாத பவபீதி அனைத்தும் போக்கி

பூரணமாய்உள்ள பரம்பொருளே யாவாய்!

கருத்து:

அறுபத்து நான்கு கலைகளையும் கற்றாலும், தன்னை அறியும் அறிவை உணராவிட்டால் நீ பிறந்தும் இறந்தவனே.

ஆத்ம ஞானம் பெறாவிட்டால் உலக துக்கத்தையும், மரண பயத்தையும் நீக்க முடியாது.

பாடல் : 30

<u>கறையற்ற</u> பரப்பிரம்மம் ஒன்றே உண்மை

(நீ) காண்பதுவும் கேட்பதுவும் எவையும் இல்லை

<u>நிறைவுற்ற</u> பரப்பிரம்மம் ஒன்றே உண்மை

(நீ) நினைப்பதுவும் நினையாதும் எவையும் இல்லை

<u>மறைவற்ற</u> பரப்பிரம்மம் ஒன்றே உண்மை

மற்றதெல்லாம் ஒருகாலும் இலவே இல்லை

<u>குறைவற்ற</u> பரப்பிரம்மம் <u>நாமே</u> என்று

கோதறவே எப்போதும் தியானம் செய்வாய்!

கருத்து:

உன் யதார்த்த (பிரம்ம) சொரூபம் கங்கு, கறை இல்லாதது ; ஊசி நாட்ட இடம் இல்லாமல் எங்கும் நீக்கமற நிறைந்திருப்பது ; மறைக்க முடியாத ஒன்று ; பரிபூரணமானது. ஆகவே குறையாதது.

''அது நாமே, நாமே அது ''

என சிரமம் இல்லாமல் தியானம் செய்வாயாக!

பாடல் : 31

ஜகமுதலாய் எண்ணுவதை தூரத் தள்ளி
சகலமுமே பிரம்மம்எனத் தியானம் செய்வாய்
அகம்உடல் என்றெண்ணுவதை தூரத் தள்ளி
அகம்பிரம்மம் என்றனிசம் தியானம் செய்வாய்
சகலமுமே பிரம்மமென்றும் அதுநாம் என்றும்
சந்ததமும் சலியாது தியானம் செய்தால்
அகம் அன்னியம் ஜகம்முதலீ தனியமென்னும்
அயலெல்லாம் அனுதினமும் அடைவாய்தீரும்!

கருத்து:

ஜகத்தையும், உயிரினங்களையும், உடலையும், ஆண், பெண், குழந்தை என்ற பேதத்தையும் மூலத்தோடு கெடுத்து, அனைத்தும் ஒன்றே

''அது நாமே, நாமே அது''

என சலிப்பில்லாமல் தியானம் செய்வாயாக!

பாடல் : 32

அலைமனதின் ஓர்மையில்லாத் தன்மையாலே

அகம்பிரம்ம பாவனையே செய்ய சக்தி

இலதேனும் எப்போதும் சிரத்தையோடு

யாம்பிரம்மம் யாம்பிரம்மம் யாமேஎல்லாம்

சலனமில்லா பரமேநாம் பரம்நாம் என்னும்

சப்தத்தை உரைத்தாலும் இவ்வறத்தால்

நிலைமருவா தலைமனது மெள்ள மெள்ள

நிச்சலமாய் நிகழ்த்திய பாவனையில் நிற்கும்!

கருத்து:

அலையும் மனது ஓர்மைப் படவில்லையானால்

''அகம் பிரம்மம், பிரம்மம் அகம்''

என சப்தத்தோடு சொல்லி சொல்லி பழகி வந்தால், இந்த தர்மத்தினால் மனம் அந்த ஒன்றில் குவியும். அசைவற்று நிற்கும். இது உறுதி!

பாடல் : 33

நிரந்தரமாய் பாவனையில் மனது நின்றால்

நிச்சலமாய் அகண்டபர ஞானம்உண்டாய்

திரிந்தலையும் மனதினுடைய விகற்பமாக

தெரிகின்ற பேதம்எல்லாம் உடனேதீரும்.

தெரிந்திடும் இப்பேதமெல்லாம் தீரும் மட்டும்

திருசியமாய் தெரிவதெல்லாம் பரமே என்றும்

பொருந்திய அப்பரப்பிரம்மம் நாமே என்றும்

பூரணமாய் எப்போதும் தியானம் செய்வாய்!

கருத்து:

இடைவிடாத தியான பலத்தினால் பேதம் அனைத்தும் மறையும்.

பேதம் மறையும் பரியந்தம் அனைத்தும் அந்த ஒன்றே

''அதுவே நாம், நாமே அது''

என தியானத்தில் நிலைத்து நிற்பாயாக!

பாடல் : 34

நிறைவுரும் இந்நிஷ்டை யுள்ளோர் நீசரேனும்

நிர்மலமாம் பரமாகி முக்தராவர்

அறைவதிலோர் அணுவேனும் ஐயமில்லை

உறுதியிதே ஆதலினால் முமுட்சுவெல்லாம்

குறைவறவே இந்நிஷ்டை கூடுமட்டும்

கூறுபடும் பேதமெல்லாம் பிரம்மமென்றும்

அறிவுருவாம் அப்பிரம்மம் நாமே என்றும்

அகண்ட பரபாவனையே பழகவேண்டும்!

கருத்து:

பாவிகளுக்கெல்லாம் மகாபாவியாக இருந்தாலும் கவலை வேண்டாம் ; பயம் வேண்டாம். உன் மனம் ஓர்மைப் படும் பரியந்தம்

''அதுவே நாம், நாமே அது''

என்று அகம்பிரம்ம பாவனை செய்து வந்தால் சுகம் பெருவாய். சிவம் ஆவாய். இது சத்தியமே!

பாடல் : 35

மாயையில்லை மருவும் அகங்காரம் இல்லை
மனதும்இல்லை புத்திஇல்லை சித்தம்இல்லை
காயம்இல்லை கருமம்இல்லை கர்த்தாஇல்லை
காண்கின்ற பொறிகள்இல்லை புலன்கள்இல்லை
ஆயபல உயிர்களில்லை அமரர் இல்லை
அயனும்இல்லை ஹரியும்இல்லை ஹரனும்இல்லை
நேயபொருள் எவையும்இல்லை எல்லாம் என்றும்
ஏகபரி பூரணமாம் பிரம்மரூபம்!.

*கருத்து:*

மாயா ஸ்வரூப கர்த்தாக்களான திரிமூர்த்திகளும் இல்லை. அவர்கள் காரியமான உலகமும் இல்லை.

அவைகளை உண்டு என மதிக்கும் மனம், புத்தி, சித்தம் இல்லை. அவைகளை நான், எனது என புசிக்கும் அகங்காரம் இல்லை.

இதன் உட்கருத்து: நாம ரூப குணம் இல்லை. இருப்பது ஒன்றே, அது யாமே, அது நீயே என ஓர்மித்து ஆனந்தம் பெறுவாய்!

பாடல் : 34

நிறைவுரும் இந்நிஷ்டை யுள்ளோர் நீசரேனும்

நிர்மலமாம் பரமாகி முக்தராவர்

அறைவதிலோர் அணுவேனும் ஐயமில்லை

உறுதியிதே ஆதலினால் முமுட்சுவெல்லாம்

குறைவறவே இந்நிஷ்டை கூடுமட்டும்

கூறுபடும் பேதமெல்லாம் பிரம்மமென்றும்

அறிவுருவாம் அப்பிரம்மம் நாமே என்றும்

அகண்ட பரபாவனையே பழகவேண்டும்!

கருத்து:

பாவிகளுக்கெல்லாம் மகாபாவியாக இருந்தாலும் கவலை வேண்டாம் ; பயம் வேண்டாம். உன் மனம் ஓர்மைப் படும் பரியந்தம்

''அதுவே நாம், நாமே அது''

என்று அகம்பிரம்ம பாவனை செய்து வந்தால் சுகம் பெருவாய். சிவம் ஆவாய். இது சத்தியமே!

பாடல் : 35

மாயையில்லை மருவும் அகங்காரம் இல்லை
மனதும்இல்லை புத்திஇல்லை சித்தம்இல்லை
காயம்இல்லை கருமம்இல்லை கர்த்தாஇல்லை
காண்கின்ற பொறிகள்இல்லை புலன்கள்இல்லை
ஆயபல உயிர்களில்லை அமரர் இல்லை
அயனும்இல்லை ஹரியும்இல்லை ஹரனும்இல்லை
நேயபொருள் எவையும்இல்லை எல்லாம் என்றும்
ஏகபரி பூரணமாம் பிரம்மரூபம்!.

கருத்து:

மாயா ஸ்வரூப கர்த்தாக்களான திரிமூர்த்திகளும் இல்லை. அவர்கள் காரியமான உலகமும் இல்லை.

அவைகளை உண்டு என மதிக்கும் மனம், புத்தி, சித்தம் இல்லை. அவைகளை நான், எனது என புசிக்கும் அகங்காரம் இல்லை.

இதன் உட்கருத்து: நாம ரூப குணம் இல்லை. இருப்பது ஒன்றே, அது யாமே, அது நீயே என ஓர்மித்து ஆனந்தம் பெறுவாய்!

பாடல் : 36

அன்னியமே தோன்றாத அகண்டாகார

அறிவுதனை அடைந்தவனே முக்தனாவான்

இந்தவிதம் அகண்டபர ஞானமுற்றோன்

இவ்வுலகில் எவ்விடத்தும் அரியவனாவான்

(அவன்) சொல்ல வொண்ணா பலகோடி ஜீவருக்குள்

உரமான ஞானமுள்ளோன் ஒருவன் தானே

அன்னவனைத் தரிசித்த மாத்திரத்தில்

அறம்மேலாம் அறம்எல்லாம் அழியுமன்றே!

கருத்து:

தமக்கு அன்னியமாக எதுவும் காணாத் தன்மையால் ஓர்மித்த அறிவு சொரூபமாக இருப்பவனை திரிலோகத்திலும் காண்பது அரிது (திரிலோகத்தில் ஒரு ஞானி).

அப்படி அவனைக் காணும் பாக்கியம் பெற்றவர்களுக்கு அபிமான அகங்காரம் அழியும். மோட்ஷ தர்மம் கிட்டும்.

பாடல் : 37

பேசிய இந்நிச்சயமும் சமாதிவிட்டு

பிரிவுற்ற காலத்தில் உள்ளதன்றி

பாசமில்லா சமாதிதனில் இருக்கும் காலை

பரவிய இந்நிச்சயமும் அறிஞர்க்கில்லை

சாசுவத சமாதி தனில் சலனமற்று

சங்கல்ப விகல்பங்கள் அனைத்தும் அற்று

ஆசில் பரமானந்த அனுபவத்தோடு

ஆவரணமின்றி அசஞ்சலமாய் நிற்பன்!

கருத்து:

திடஞானிக்கு சமாதி நிஷ்டா சாதனம் இல்லை. நின்றாலும், இருந்தாலும், கிடந்தாலும், உண்டாலும், உறங்கினாலும் உடல் உலக உணர்ச்சியற்று இருப்பான்.

அவனுக்கு ஆவரண மயக்கமோ, விட்க்ஷேப கலக்கமோ இராது. மனம் அசைவற்று மஹத்தாகவே இருக்கும்.

பாடல் : 38

சலனமில்லா சிலைபோலும் காஷ்டம் போலும்

சங்கல்ப விகல்பங்கள் ஒன்றும் இன்றி

கலனமுறாப் பிரம்மத்தில் பாலும் நீரும்

கலப்பது போல் வேறறவே கலந்து சற்றும்

அலைவறவே வெறிதாக சுகித்திருக்கும்

அறிஞனுடைய அந்நிஷ்டை மகிமை தன்னை

நிலைமருவா மனத்தாலும் வசனத்தாலும்

நினைத்திடவும் பகர்ந்திடவும் யார்தான் வல்லோர்?

கருத்து:

திடஞானியின் நிலை
கண்இருந்தும் குருடாய்,
காது இருந்தும் செவிடாய்,
வாய் இருந்தும் ஊமையாய் (ஆனால் பர ஒலி வரும்)
குத்துக் கல்லை போலும்,
பட்ட மரம் போலும்,
பித்தனைப் போலும்,
விபரம் அறியா சிசுவைப் போலும்
இருக்கும் அவன் மஹிமையை தேவர் மூவராலும் மற்றும் எவராலும் விரித்துரைக்க முடியாது.

பாடல் : 39

பலகால வாதனையால் துவைதம் தானே

பரமார்த்த மென்று நினைவு உதித்தபோதும்

தொலையாத துவைத வடிவாகத் தானே (தோற்றும்)

துவைதத்தை நினையாமல் அவற்றை யெல்லாம்

அலையாத அதிஷ்டான அறிவாய் நின்ற

அத்வைத மானபர வடிவே யாகச்

சலியாமல் எப்போதும் நினைத்தே யத்தால்

சத்தியசித் சுகவடிவாய் முக்தனாவாய்!

கருத்து:

பல ஜன்ம தொடர்பினாலும், இந்த ஜன்ம துர்வாசனையினாலும் துவைதமாக தோற்றுமேயன்றி அத்வைதம் தோற்றாது.

அலையாத மனதுடன் சலியாமல் எப்போதும் துவைதத்தை மறந்து, அனைத்தும் ஒன்றே என அத்வைத பாவனை பண்ணினால் அது நாம் என்ற நிலை பெற முடியும்.

பாடல் : 40

மனததுதான் நின்சகஜ சொரூப மானால்
மற்றதுதான் மீளாது மாண்டு போகும்
மனதுடைய மீளாத மாய்வு தானே
மஹத்தான மோட்ஷநிலை அதனால் மைந்தா
மனததனை மீளாது மாய்க்க வேண்டி
மஹத்தான பரப்பிரம்ம நிச்சயத்தை
மனதொருமையுடன் செய்து மனதை மாய்த்து
மஹத்தான முக்திநிலை மேவி நிற்பாய்!

கருத்து:

மன அழிவு என்பது மனம் மஹத்தான நிலையாகும். முள்ளைக் கொண்டு முள்ளையெடுத்து, இரண்டு முள்ளையும் தூர எறிந்து விடுவது போல

''அகம் பிரம்மம்''

என்ற முள்ளை வைத்து ஜக, நாம, ரூப, குணம் உள்ள முள்ளை எடுத்து முடித்து, இரு முள்களையும் தூர எறிந்து விடலாம்.

பாடல் : 41

ஆதலினால் அனைத்திற்கும் அதீதமான

அகண்டபரப் பிரம்மம்அகம் என்றெப்போதும்

சாதகமாம் பாவனையே செய்ததாலே

சஞ்சலமாம் விகற்பமெல்லாம் தவிர்ந்து எப்போதும்

பேதமில்லா பரப்பிரம்ம ஞானியாகி

பின்னமில்லா பரப்பிரம்ம வடிவேயாவாய்

ஈதையல்லால் எளிதாக முக்தி சேர

வேறொன்றும் உபாயமில்லை இதுவே உண்மை !

கருத்து:

காலாதீதமான

''அதுவே நாம், நாமே அது''

என்ற அகம் பிரம்ம பாவனையைத் தவிர முக்தி அடைய வேறு எளிதான உபாயம் இல்லவே இல்லை.

பாடல் : 42

எப்போதும் இயம்பாமல் மௌனியாகி

எவருடனும் கூடாமல் ஏகாந்தத்தில்

கற்போல அசையாமல் இருந்து சற்றும்

கலங்காத மனதுடனே ஒருமையாகிச்

சற்போத சுககனமாம் பரம்நாம் என்றே

சந்ததமும் பாவித்து சாந்தனாகித்

தற்போத சூனியனாய் விகற்பம் தீர்ந்து

தற்பதமே தாமாகி முக்தனாவாய்!

கருத்து:

வாய் பேசா மௌனமாகி, சிலகாலம் எவருடனும் சேராமல் ஏகாந்தமாக இருந்து கலக்கம், பயம் இல்லாமல்

''நாம் அந்த ஒன்றே''

என எண்ணி எண்ணி மற்ற எண்ணங்களையெல்லாம் கெடுத்து, முடிவில் நாம் அந்த ஒன்றே என்ற எண்ணத்தையும் கெடுத்து, மனம் பேசா மௌனமாய் (மோனமாய்) விலக்கவொண்ணா, விளக்கவொண்ணா அதுவாகவே இருப்பாயாக!

பாடல் : 43

தேகமுதல் ஒருகாலும் நாம் அன்றென்றும்
        தெரிவுருவாம் பரப்பிரம்மம் நாமே என்றும்
பாகமுற வொருபொருளும் இல்லையென்றும்
        பலபொருளும் பரப்பிரம்மம் தாமே என்றும்
ஏகபர பாவனையே இடைவிடாமல்
        எப்போதும் இனிமையுடன் செய்வாயாகில்
மோக மெல்லாம் ஒழிந்துடனே முக்தனாவாய்
        மொழிந்ததிலோர் ஐயமில்லை சத்தியம் தான்!

கருத்து:

தேகம் நாம் என்ற எண்ணத்தைக் கெடுத்து,
பார்க்கும் பொருள் நாமே
பார்க்கப்படுவது நாமல்ல
(இங்கு நாம ரூப குணம் சொல்லப்படுகிறது), அனைத்தும் நாமே என ஏக பரபாவனை செய்தால் காமம், குரோதம், மோகம், சந்தேகம் அனைத்தும் தீரும்.

அடுத்த வினாடி நீ முக்தனாகவே இருப்பாய். இது சத்தியமே!

பாடல் : 44

நற்பிரம்ம விவேக வலியுள்ள தீரர்

நாரிமுதல் சுகத்திச்சை பண்ணும் போதும்

பற்பலவாய் தோன்றிய அச்சுகத்தை யெல்லாம்

பரப்பிரம்ம சொரூபசுகம் எனவே ஓர்ந்து

கற்பிதமாம் விஷய சுகம் அனுபவிக்க

கனவிலுமே கருதாது தைரியத்தோடு

அற்பமில்லா அகண்டபர சுகமே சேர

அகண்டபர ஞானபலம் அடைய வேண்டும்!

கருத்து:

ஆத்ம சாதனை பண்ணும் குடும்பஸ்தன் தன் மனைவியின் தூலசுகத்தையும் நாம ரூப குணத்தோடு எண்ணாமல் பரபாவனையாக கலங்காமல், களங்கம் இல்லாமல், தைரியமாக செய்வானாகில்

செயலும் மாறும் ; சுவையும் மாறும். அவசியம் ஆத்மானந்தமாகவே உணர்வான்.

அது அவனுக்கு ஆத்ம பலமாகும்.

பாடல் : 45

நினைவையெல்லாம் நீக்கிமனோ வாக்குக் கெட்டா

நிஜவடிவாய் நிற்பதுவே நிறைந்த முக்தி

நினைவு அணுவும் வேறாக நிகழுமாகில்

நினைவதுவே மஹத்தான பந்தமாகும்

நினைவறவே நிற்கின்ற நிஷ்டை தானே

நிஜமான அத்வைத நிலைமையாகும்

நினைவறவே நிற்கின்ற நிஷ்டை தானே

நிரதிசய ஆனந்த நிலைமையாகும்!

கருத்து:

எண்ணமே பந்தம். கற்பனையே நகரமாக தோற்றி நரகமாக முடியும்.

சங்கல்பமே நரகம்; சங்கல்ப ரஹிதமே மோட்ஷம்! எண்ணம் நசித்த இடத்தில் பெறும் ஆனந்தம் சொல்லவோ உணர்த்தவோ முடியாது.

அதுவே ஜீவன் முக்திக்கு அஸ்திவாரம்.

பாடல் : 46

மஹத்தான மாயையென்ன? அவித்தையென்ன?

மஹத்தான பந்தமென்ன? முக்தியென்ன?

மஹத்தான சித்தமென்ன? ஜீவனென்ன?

மஹத்தான ஜகங்களென்ன? ஈசனென்ன?

மஹத்தான நாமமென்ன? ரூபமென்ன?

மதிக்கின்ற மனதுடைய நினைவனைத்தும்

மஹத்தான பரப்பிரம்ம சொரூபமன்றி

மற்றணுவும் இலையெனவே நிச்சயிப்பாய்!

கருத்து:

மாயையென்றும், அவித்தையென்றும்,
பந்தமென்றும், மோட்ஷமென்றும்,
சித்தமென்றும், ஜீவனென்றும்,
ஜகத்தென்றும், ஈசனென்றும்
''நாம ரூப குணத்தோடு'' எண்ணுவது மனதின் தோற்றமே. உண்மையில் அவை இல்லை. எல்லாம் பிரம்ம சொரூபமே.

''அது நாமே, நாமே அது''

பாடல் : 47

அநவரதம் அகம் பிரம்ம நிச்சயத்தை

ஆதரவோடு அதிதிடமாய் அப்யாசிக்கின்

மனதிலுள்ள விகற்பமெல்லாம் முன்பு தீர்ந்து

மற்றதுதான் விறகற்ற வன்னியே போல்

தனது நிஜ அதிஷ்டான பிரம்மத்தின் கண்

தான்தானே சாந்தியுறும் ஆதலாலே

சொனவிதமாய் அகம்பிரம்ம நிச்சயத்தை

சுகமுறவே முமுட்சுவெல்லாம் பழகல் வேண்டும் !

கருத்து:

''அகம் பிரம்மம், பிரம்மம் அகம்''

(அதுவே நாம், நாமே அது) என்ற பாவனையில் மனது நிலைத்தால் விறகு இல்லாத அக்கினி எப்படி ஒடுங்குமோ, அதே போல் வேறு எண்ணமில்லா மனமும் ஒடுங்கி அழிந்து விடும்.

அதுவே முமுக்ஷுத்வம் ஆகும்.

பாடல் : 48

சொல்லும் மலின வாதனையும் மனதின் தர்மம்

சுத்தபர வாதனையும் மனதின் தர்மம்

அலையும் ஒரு வாதனையும் பரத்திற்கில்லை

ஆதலினால் அம்மயமாய் நிஷ்டை சார்ந்து

மலினமென சுத்தமென மதிக்கப்பட்ட

மனதுடைய வாதனைகள் ஒன்றும் இன்றி

சலனமில்லா சிலைபோலும் காஷ்டம் போலும்

சற்றேனும் சலியாமல் சுகித்திருப்பாய்!

கருத்து:

உலகமாகிய லௌகீகத்திற்கும் தர்மம் உண்டு. தெய்வீகமாகிய தேவ தெய்வங்களுக்கும் தர்மம் உண்டு.

உன் யதார்த்த சொரூபமாகிய பரத்திற்கு தர்மம் இல்லை. ஆகவே பரசொரூபமாகவே (ஆத்மாவாகவே) சலியாமல் பட்ட மரம் போலும், குத்துக்கல்லைப் போலும்

''அதுவே நாம், நாமே அது ''

என அசையாதிருப்பாயாக !

பாடல் : 49

எல்லையில்லா வேதமெல்லாம் சித்த சுத்திக்கு

ஏதுவாக உபாசனையை முன்பங்கங்கே

சொல்லியதால் சித்தத்தின் சுத்தி பெற்றோர்

சுகமாக மோட்ஷ நிலை சார்வதற்கே

அல்லலிலா ஆனந்த கனமேயான

அகண்டபரி பூரணமாம் பரசிவத்தில்

கல்லெனவே அசையாமல் கலந்திருக்கும்

களங்கமில்லா நிஷ்டையினைக் காட்டிற்றன்றோ!

கருத்து:

வேதம், சாஸ்திரம், புராணம், இதிகாசம் எல்லாம் சித்த சுத்திக்காக சொல்லப்பட்டதேயன்றி அவை முழுமையாகாது.

அவை ஏறிச்செல்லும் படிகள். படி பரண் ஆகாது.

மேலே சென்ற பின் கல் போன்று அசையாமல் இருக்க முடியும். அதுவே நீ. இது உறுதி!

பாடல் : 50

காலமுதல் கற்பனையே இலாமையாலே

காண்கின்ற காட்சி முதல் இருப்பதெங்கே?

தூலமுதல் காத்திரமே இலாமையாலே

தொடர்கின்ற பவபந்தம் இருப்பதெங்கே?

மூலமதாம் அஞ்ஞானம் இலாமையாலே

முளைக்கின்ற அதன் செய்கை இருப்பதெங்கே?

ஆலயமாம் பரப்பிரம்மம் அனைத்தும் என்றும்

அதுதானே அகமென்று அநுசந்திப்பாய்!

கருத்து:

முக்காலமும் இல்லாததினால் முன், பின், நடு என்ற கற்பனைக் காட்சி எப்படி இருக்க முடியும்? அனைத்து ஜீவ கோடிகளும் ஒன்றே ஆன தன்மையினால் பவமோ, பந்தமோ அங்கு ஏது?

அனைத்துக்கும் காரணமான அஞ்ஞானமே இல்லாத போது வினையென்றும், அதனால் போக்குவரவு என்றும் எப்படி இருக்கும்?

இருப்பது ஒன்றே. ''அது நாமே, நாமே அது''

பாடல் : 51

ஒரு பொருளும் ஒருகாலும் ஜனிக்க வில்லை

ஒருகாலும் ஜனியாதது இருப்பதெங்கே?

விரிவுறவே ஜனியாதது மற்றி ராதும்

வீதலடைந் திடுமென்ன விளம்பலெங்கே ?

அரியவனே! ஆதலினால் அகண்டமான

அத்வைதப் பிரம்மத்திற்கு அயலே இல்லை

சர்வமுமே பிரம்மமென்றும் அதுநாம் என்றும்

சலியாத பாவனையால் சாந்தனாவாய்!

கருத்து:

எப்பொருளும் உற்பத்தி ஆகவில்லை. உற்பத்தி ஆகாதது, கெட்டுப்போனது, அழிந்து போனது என சொல்ல இடம் இல்லை (உன் மனோ கற்பனையே காரணம்). அனைத்தும் ஒன்றே, அது நலமே.

''அதுவே நாம், நாமே அது''

பாடல் : 52

எப்பொருளும் எங்கேனும் இருக்கு மாகில்

இவ்விதமாய் இதுவுளது என இயம்பல்வேண்டும்

சிற்பொருளே யன்றிஒரு பொருளு மென்றும்

சிறிதுமில்லாத் தன்மையினால் இயம்புதற்கிங்கு

அற்பவுமே இடமில்லை ஆதலாலே

அகண்டபரப்பிரம்ம வடிவான எம்மில்

சொற்பொருளோ ரணுவும் இல்லை யென்றெப்போதும்

சும்மாவே இருந்து மிகச் சாந்தனாவாய்!

கருத்து:

நாம ரூபத்தோடு எப்பொருளும் தோன்றவில்லை. அனைத்தும் சித்சொரூபமே. உன் மனோபிரேமையை வைத்து நாம ரூபத்தை கொடுத்தாய்.நாம ரூபத்தை இது இப்படி என்று சொல்ல இடமே இல்லை. அகண்ட வடிவான

''அந்த ஒன்றே, அது நாமே''

என மனோ மௌனமாய் சும்மாவே இருக்கப் பழகுவாயாக!

பாடல் : 53

சகலமுமே பிரம்மமென்னும் நிச்சயத்தால்

ஜகம்முதலீது உண்மையென்னும் பிராந்தி நீங்கும்

திகழ்பிரம்மம் நாம் என்னும் நிச்சயத்தால்

தேகமுதல் நாமென்னும் பிராந்தி நீங்கும்

தகுமகனே! ஆதலினால் எல்லாம் என்றும்

தற்பிரம்மம் தாம் என்றும் அதுநாம் என்றும்

வெகுதிடமாம் அநுபூதி அடைந்தெப் போதும்

வேறறவே மிகவும் உபசாந்த னாவாய் !

கருத்து:

ஜடகடபடாதிகள் அனைத்தும் பிரம்ம ஸ்வரூபமே என நிச்சயித்தால் உலகம், உயிரினங்கள் , உலக வஸ்துக்கள் மேல் உள்ள நாம ரூப குணம் மறையும்.

நாம் உடலல்ல, ''நாம் அந்த ஒன்றே'' என நிச்சயித்தால் உடல் உணர்ச்சிகள் நம்மை பாதிக்காது.

இதில் உறுதியான நம்பிக்கை வேண்டும். இந்த அனுபவத்தினால் சாந்தி கிட்டும்.

பாடல் : 54

பதம்பதமாய்ச் சொல்லியிடும் நாமம் இல்லை

பதார்த்தமெனச் சொல்லியிடும் உருவம் இல்லை

விதவிதமாய் விளங்கிய எப்பொருளும் இல்லை

விரிந்த ஜகஜீவபரம் எவையும் இல்லை

சுதந்திரமாய் ஒருகாலும் வொன்று மின்றிச்

சுத்தமதாய் உளது பரப்பிரம்மம் ஒன்றே

நிதம்தவிராது அப்பிரம்மம் நாமே என்று

நிலைபெற்ற ஞானத்தால் முக்தனாவாய்!

கருத்து:

பிரித்து பிரித்து சொல்லும் பெயரும் இல்லை. பதஅர்த்தமும், பதார்த்தமும் விளக்கும் உருவமும் இல்லை.

அடிமைத்தனம் இல்லாத தமக்குத் தாமே சுதந்திரமாய் எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் அந்த காலாதீத வஸ்து ஒன்றே உண்மை.

''அதுவே நாம், நாமே அது''

என உறுதியான ஞானத்தால் முக்தனாகவே இருப்பாய்!

பாடல் : 55

இல்லையென இயம்பியிடும் பொருளும் இன்றி

இங்குளது என்றியம்பியிடும் பொருளும் இன்றி

சொல்லியிடும் சொற்பொருளோர் அணுவும் இன்றி

சும்மாவே இருந்து மஹா மௌனியாகி

அல்லலில்லா அகண்டபரா நந்தம் மேவி

அநாதிபவ துக்கங்கள் அனைத்தும் தீர்ந்து

கல்லெனவே திடமான பரஞானத்தால்

கற்பனையோ ரணுவுமில்லா(த) முக்திசார்வாய்!

கருத்து:

அந்த ஒன்றை இல்லை எனவும் சொல்லமுடியாது. இருக்கிறது என்றும் சொல்ல முடியாது.

சொல்பவனும் இல்லை. சொல்லப்படும் பொருளும் இல்லை. அங்கு கற்பனை செல்லாது. மனமும் இல்லை. வாக்கும் இல்லை.

அசைவில்லாத ஒன்று பட்ட நிலையில் முக்தனாவாய்!

பாடல் : 56

சந்ததம்நாம் பரப்பிரம்ம சொரூப மன்றி

சற்றேனும் சம்சாரி அல்லவென்று

இந்தவிதம் அறிவுற்று ஜலத்தில் சேர்ந்தங்கு

ஏகரஸ மாகின்ற லவணம் போல

அந்தமில்லா அகண்டபரப் பிரம்மத்தின் கண்

ஐக்கியமே அடைந்த மனோவிருத்தி தானே

மைந்தா! அகண்டாகார விருத்தி யென்று

மாசற்ற ஞானிகளால் மதிக்கலாகும்!

-110-

கருத்து:

நாம் அந்த ஒன்றே என்ற உறுதியானது, ஜலத்தில் உப்பு எப்படி சேர்ந்து மறைந்திருக்கிறதோ, அப்படி உன் மனம் உருத்தெரியாமல் அந்த ஒன்றில் மறைந்து கரைந்து போக வேண்டும்.

இதுவே அகண்டாகார விருத்தி என சொல்லலாம்.

பாடல் : 57

தேகமுதல் நாம்என்னல் துவைத விருத்தி

திகழ்சாட்சி நாம்என்னல் சாட்சிவிருத்தி

ஏகபரம் நாம்என்னல் அகண்ட விருத்தி

இம்மூன்று விருத்திகளில் இரண்டைத் தள்ளி

ஆகும் அகண்டாகார விருத்தி தன்னை

அநவரதம் ஆதரவாய் அப்யாசித்து

சோகமுறும் சித்த விகற்பங்கள் தீர்த்து

சொன்ன அகண்டைகரச ஸ்வரூப மாவாய்!

கருத்து:

சரீராதிகளை நாம் என்றால் அது துவைதம்.

அனைத்து சரீராதிகளையும் நாம ரூப குண விகாரமின்றி சலனமில்லாமல் பார்ப்பது சாட்சிவிருத்தி. அது விசிஷ்டாத் துவைதம்.

அண்டபிண்ட சராசரங்கள் அனைத்தையும் நிர்குணமாக (பார்ப்பது அல்ல) அறிவது அத்வைதம். இது அகண்ட விருத்தி.

அறிவதும் உணர்வதும் இன்றி தாமாக இருப்பது அகண்டைக ரசம்.

பாடல் : 58

சர்வமஹா மந்திரமும் உபதேசிப்போர்

சாமான்ய குருவெனவே சாற்ற லாகும்

இருமையில்லா பரப்பிரம்மம் நீயே என்று

இணையற்ற உபதேசம் செய்கின்றோனே

பெருமைமிகும் சத்குரு வென்றுரைக்க லாகும்

பின்வெகுவாய் பேசுவதால் பெறும்பேறென்ன?

அரியபரம் நீயென்போன் ஆசானாவான்

அகம்பிரம்மம் என அறிவோன் மாணானாவான்!

கருத்து:

மந்திரங்களையும், சித்திகளையும், மஹா சக்திகளையும் போதிக்கக் கூடியவர் சாமான்ய குரு.

அந்த ஒன்றே யாம்!

அந்த ஒன்றே நீ!

அந்த ஒன்றே அனைத்தும்!

என ஐயமில்லாமல் ஸ்தாபிக்கக் கூடியவர் ஸ்ரீ சத்குரு ஆவார்! அதை அப்படியே அசைவின்றி ஏற்றுக் கொள்பவன் சத்சீடனாவான்.

பாடல் : 59

பொருந்திநிதம் செய்கின்ற சிரவணத்தால்

புகலும் அசம்பாவனை தான்முன்பு நீங்கி

வருந்திநிதம் செய்கின்ற மனனம் தன்னால்

வாளாவாம் சம்சய பாவனையும் நீங்கி

விரிந்து நிதம் செய்கின்ற நிதித்தியாசத்தால்

விபரீத பாவனையும் நீங்கும் போது

நிரந்தரமாம் பரப்பிரம்ம சாட்ஷாத் காரம்

நிச்சலமாம் தன்மனதில் நிகழுமன்றே!

கருத்து:

பேத பாவனையை நீக்கி ஒன்றுபடுத்தி கேட்பதாலும், அபேத திருஷ்டியினாலும் நடைபெறும் சம்பவங்கள் மறையும்.

கேட்டதை மனம் வருந்தி ஓர்மித்து செய்கின்ற மனனத்தால் (தியானத்தால்) சந்தேகம், கலக்கம், களங்கம் ஒழியும்.

தியான பலத்தினால் அனைத்தையும் ஒன்றுபடுத்தி

''அதுவே நாம், நாமே அது ''

என்ற நிதித்யாசத்தால்(சுய அனுபவத்தால்) ஆவரண மயக்கமும் , விட்ஷேப கலக்கமும் நீங்கி பிரம்ம சாட்ஷாத்காரம் ஸ்வயமாக நிகழும்.

பாடல் : 60

சுயமதுவாம் ''தத்துவம் அஸி'' யென்னும் வாக்கியம்

சொல்லும் உபதேச மஹா வாக்கியமாகும்

இயலும் ''அகம் பிரம்மாஸ்மி'' யென்னும் வாக்கியம்

இலகும் அனுபூதி மஹா வாக்கியமாகும்

மயன்மருவா ''பிரக்ஞானம் பிரம்மம்'' வாக்கியம்

மனனத்தின் அப்யாச வாக்கியமாகும்

''அயமான்மா பிரம்மம்'' என்றறையும் வாக்கியம்

அவைக்கெல்லாம் சம்மதமாம் வாக்கியமாமே!

கருத்து:

ஸ்ரீ சத்குரு உபதேச வாக்கியம் ''தத்துவம் அஸி''.

தைலதாரை போல் மனனம் செய்வது ''பிரக்ஞானம் பிரம்மம்''. அதுவே நாம், நாமே அது என பிரம்ம பிரக்ஞையோடு இருப்பதாகும்.

அகம் பிரம்மாஸ்மி யினால் பேதம் களைந்து தன் பயிற்சியினாலும், முயற்சியினாலும் அனுபவத்திற்கு கொண்டு வருவதாகும்.

சத்சீடனின் சுய அனுபவத்தினால்''அயமான்மா பிரம்மம்'', யாம் அதுவாக இருக்கிறோம் என்ற நிலையானது முடிந்த முடிவாகும்.

பாடல் : 61

முக்தியுற வேண்டுமென இச்சை செய்தல்

மோட்ஷத்தின் பொருட்டே தன்உயிர் தரித்தல்

பக்தியுடன் நன்றாக விசாரம் செய்தல்

பாங்காக பரப்பிரம்ம ஞானம் எய்தல்

இத்துவைத ஜகத்தையெல்லாம் அறமறத்தல்

இத்தனையும் பரமார்த்த தசையில் பொய்யே!

அத்வைத பரப்பிரம்மம் ஒன்றே உண்மை

அதுவேநீ அணுவும் இதில் ஐயமில்லை!

**கருத்து:**

முக்திக்கு ஆசையிருந்தால் பதமுக்தி வேண்டாம் பரமுக்திக்கு முயற்சி செய்.

பக்தி செய்ய வேண்டுமானால் நாம ரூபமுள்ள இறைவனை, தமக்கு முன்பாக காண்பவனை, தனக்குள் கொண்டுவா. இறைவன் வேறல்ல; நாம் வேறல்ல என ஒன்றுபடுத்து.

அத்வைதத்திற்கு முயற்சி செய்தால் ஜகத் ஜீவ ஈஸ்வராதிகளை ஒன்றுபடுத்து. அனைத்தும் ஒன்றே.

''அதுவே நாம், நாமே அது ''

என அனுபவத்தில் உணர்ந்து, உணர்ந்து, உணர்ந்து கரைந்துவிடு.

பாடல் : 62

மிகமிகவும் சப்தத்தை விரும்பிச் சொல்லல்

மிகவாக்கின் துக்கத்திற்கு கேதுவாகும்

புகல்பலவாம் சப்தத்தை பரிந்து கேட்டல்

பொருந்தும் மனோ மயக்கத்திற்கு ஏதுவாகும்

வெகுவிதமாம் அர்த்தத்தை விசாரம் செய்தல்

விவித மனோ துக்கத்திற்கு ஏதுவாகும்

தகுமகனே! ஆதலினால் அனைத்தும் தள்ளி

தற்பிரம்மம் தாம்எனவே நிதித்யாசிப்பாய்!

கருத்து:

நம் வாக்கால் திருத்தி விடலாம் என பல வழிகளில் திரும்ப திரும்ப சொல்வதால் உன் வாக்குதான் விரயமாகும். அதனால் பலன் இல்லை.

பற்பலவான அர்த்தத்தோடு பிறர் வார்த்தைகளை விரும்பிக் கேட்டால் மனமருட்சி உண்டாகும், மனம் நிலைக்காது. இங்கும் பயன் இல்லை.

ஒருவர் வார்த்தைக்கு அநேக அர்த்தத்தோடு (கருத்தோடு) விரித்து விரித்து பார்த்தால் விதவிதமான துக்கம், கலக்கம், பயம் உண்டாகும். மனம் நிலை பெறாது. இங்கும் பயன் இல்லை.

வார்த்தையோ,காட்சியோ அனைத்திற்கும் அதுவே காட்சி, அதுவே சாட்சி. அது சுகமே, அது நலமே என முடிவு கொண்டால் கலக்கம்,களங்கம், துக்கம், பயம் அற்ற நிலையில் சுகம் பெறுவாய்!

பாடல் : 63

புரையறவே உணர்பொருளை உணர்ந்த பின்னர்

பூரணமாம் அப்பொருளின் சாட்ஷாத் காரம்

மருவியிட நிதித்யாசம் செய்வ தல்லால்

மற்றிறையும் நூல் வழியே செல்ல வொண்ணா

தெரிபொருளை நூல்வழியால் அறிந்த பின்னர்

தெரிவித்த நூல்மொழியே மீண்டும் சொல்லல்

உரைதருதன் வாக்குக்குத் துக்க மென்றே

உபநிஷத வசனமெல்லாம் உரைக்கு தன்றோ!

கருத்து:

குணமற்ற, குற்றமற்ற, நிறைவுற்ற அந்த ஒன்றை நூல் மூலமாகவும், சத்குரு மூலமாகவும் உணர்ந்த பின்னர் திரும்ப படிப்போ,பாடமோ தேவையில்லை.

மேலும் பாடம், படிப்பு இருந்தால் எண்ணத்திற்கும், வாக்குக்கும் துக்கமாக முடியும்.

பாடம், படிப்பு தேவை இல்லையென மஹான்கள் வாயிலாகவும், உபநிஷத் மூலமாகவும் அறிவுறுத்தப்படுகிறது.

பாடல் : 64

ஆதலினால் தானியத்தை அடைந்த பின்னர்
அங்குள்ள பதர்களை (தூர) எறிதலே போல்
பேதமற உணர்பொருளை உணர்ந்த பின்னர்
இங்குற்ற நூலையெல்லாம் எறிதல் வேண்டும்
வாதகமாம் நூலையெல்லாம் எறிந்த பின்னர்
வருந்தியுமே அநவரதம் இடைவிடாமல்
போதமுற சாதகமாய் நிதித்யாசத்தைப்
புரியுடனே பூரணமாய்ப் பழகல் வேண்டும்!

கருத்து:

எதை உணர வேண்டுமோ அதை உணர்ந்த பின்னர் அதற்காக படித்த, கேட்ட நூலை ,தானியம் கிடைத்தவுடன் உமியை எறிவது போல், தூர எறியவேண்டும்.

அதை எப்படி பக்குவமாய் சாப்பிடவேண்டுமோ, அப்படி சாப்பிட்டு தூங்கி (அரிதுயிலில் ஆழ்ந்து) விடவேண்டும்.

சாப்பிடுவதும் (அனுபவமும்) தூங்குவதும் (அரிதுயிலும்) நூலில் இல்லை.

பாடல் : 65

நினக்கயல்போல் தோன்றிய இந்நாமரூபம்

நிகிலமுமே நீயலது வேறேயன்று

தனக்கயல்போல் கனவிலுணர் நாம ரூபம்

தாமலது சோதிக்கின் வேறேஉண்டோ?

எமக்கயல்போல் காண்பதெல்லாம் யாமே என்றும்

யாம்தானே ஏகபரப்பிரம்ம மென்றும்

(உன்) மனக்கவலை யாவையுமே தீருமட்டும்

மறவாமல் எப்போதும் நிதித்யாசிப்பாய்!

கருத்து:

நனவில் காணும் நாம ரூபமும், கனவில் காணும் நாம ரூபமும் நீயே அல்லாது வேறு இலவே இல்லை.

உன் பழக்க தோஷத்தால் உண்டான உன் தேவையற்ற மனக்கவலை, மனக்குழப்பம், மனோ பயமும் தீரும் வரை

''அதுவே நாம், நாமே அது''

என அப்யாசித்து அந்த உணர்வோடு இருப்பாயாக!

பாடல் : 66

இருக்கின்ற(து) இலங்குகின்ற(து) இன்பமென்றும்

இயம்பியிடும் நாமமொடு ரூபமென்றும்

தருக்கமிடும் இவ்வம்ச பஞ்சகத்தில்

தயங்கியமுன் மூன்றம்சம் பரத்தின் ரூபம்

சுருக்கமுறும் இரண்டம்சம் ஜகத்தின் ரூபம்

சொற்பொருளாம் இவ்வம்சம் இரண்டும் தள்ளி

நெருக்கமுறும் சத்தியசித் சுகமாய் மீந்தும்

நின்றபரம் நாம் எனவே நிச்சயிப்பாய்!

கருத்து:

அனுபவம் இல்லாமல், சொல்லாய் (வார்த்தையாய்) இருக்கின்ற நாம ரூபத்தை விலக்கி விட்டாயானால் உன் யதார்த்த சொரூபமே (அனுபவமாக) இருக்கும்.

அந்த ஒன்றாகிய சத்-சித்-ஆனந்தமாகவே நீ இருப்பாய். முன் இரண்டும் வார்த்தை அம்சம், பின் மூன்றும் அனுபவ அம்சமாகும்.

பாடல் : 67

துவைதமென்றும் துவைதமொடு அத்வைத மென்றும்

தூயபர மாத்துவைத மதமீதென்றும்

இவிதமென்றும் அவிதமென்றும் இலதுண்டென்றும்

இவைமுதலாம் ஆங்காங்கே இயம்ப லுற்ற

விவிதமத இவைவுரைசெய் வாதம் யாவும்

விசாரிக்கின் விமலபரப் பிரம்மம் தானாம்

குவிதலுறாப் (அப்) பரப்பிரம்மம் அதுநாம் என்று

கோதறவே பாவித்துக் குறைவு தீர்வாய்!

கருத்து:

வாதத்திற்கும், தர்க்கத்திற்கும் போகாதே. அவை உன் மனதை குழப்பத்தில் ஆழ்த்தும்.

அந்த ஒன்றே உண்மை.

வாதப்பிரதிவாதம் அனைத்தும் அந்த ஒன்றே என ஓர்மித்து, ஜலத்தில் வீழ்ந்த பருங்கல்லைப் போல் மூழ்கி விடுவாயாக!

நீ அதுவாகவே இருப்பாய்!

பாடல் : 68

அகண்டபரி பூரணமாம் பிரம்மம் தானே

அறிவற்றோர்க்கு உலகெனவே தோற்றி னாலும்

புகன்ற பலவிதமான உலகம் தானே

பூரணமாம் அறிஞருக்கு பரமாய் தோற்றும்

திகழ்ந்தெதிரே இருக்கின்ற ரச்சு தானே

தெரிவற்றோர்க்கு அரவெனவே தோற்றினாலும்

நிகழ்ந்தரவே தெரிவுற்றோர்க்கு ரட்சுவாக

நிகழ்கின்ற நீதியினை கண்டோ மன்றோ!

கருத்து:

நல்ல கண்ணுள்ளவர்களுக்கு உலகம் ஒளிமயமாகவும், குருடர்களுக்கு அந்தகாரமாகவும் தோற்றும்.

அது போல ஞானிகளுக்கு இந்த உலகம் பரிபூரணனந்தமாகவும், அஞ்ஞானிகளுக்கு, கயிற்றில் வந்த பாம்பு போல சோகம், மோகம், பயமாகவும் தோற்றும்.

பாடல் : 69

நிச்சலமாய் உணர்வுற்று நிறைந்து நிற்கும்
நிலையதுவே கைவல்ய மோட்ஷமாகும்
துச்சமிலா அந்தநிலை தொடர்ந்தோர் மீண்டும்
துன்பமுறார் துகண்மருவார் சுகமே சார்வர்
எச்செயலும் செய்து முடித்தவரே யாவர்
எப்போதும் ஏகபர வடிவாய் நிற்பர்
அச்சுகபர வடிவான அன்னோர்க்கு இங்கு
ஊனபவ விவகாரம் ஒன்று மில்லை!

கருத்து:

அசைவற்ற ஆத்மானந்த நிலை பெற்றவர் இங்கேயே இப்போதே ஜீவன் முக்தி நிலை பெற்றவராவர். அவரே இங்கு பிறந்த பயன் பெற்றவராவர்.

செய்ய வேண்டிய காரியம் அனைத்தும் செய்து முடித்தவராவர். எந்த வினாடியும் அதுவாகவே இருப்பர்.

அவருக்கு கலக்கமோ, பயமோ, விகார விவகாரமோ எந்த கணக்கும் கிடையாது.

அவர் சுக சொரூபமே!

பாடல் : 70

தன்சொரூப நிலை மருவாது அலைவோருக்கு

தளர்வு தரும் <u>பவபந்தம்</u> தவிர்வதெங்ஙன்?

என்செயினும் (தன்)சொரூபநிலை யிசையா தோர்க்கு

ஈனமுறும் <u>பவபந்தம்</u> இறவா தென்றும்

சஞ்சலமில்லா பாவனையே செய்வோருக்குச்

சலமனதின் விகற்பமெல்லாம் <u>தவிர்வதாலே</u>

அஞ்ஞானமாம் ஆவரண விட்சே பங்கள்

அனைத்துமில்லா சொரூபநிலை அணுகுமன்றே!

கருத்து:

தன்னை அறியும் அறிவை அடைந்தவர்களுக்கு நாம ரூப குணமான ஆவரண மயக்கமும், விட்ஷேப கலக்கமும் நீங்கும்.

தன்னை அறியாது நாம ரூப குணங்களிலேயே சிக்கி கோடானு கோடி காலம் அலைந்தாலும் பவமான பந்தமும், மரண பயமும் போகவே போகாது.

27188

பாடல் : 71

சத்குருவின் சந்நிதியில் ஓர்ந்த வண்ணம்

சாதுக்கள் சகவாசம் செய்து அங்கங்கே

நிர்க்குணமாம் பரப்பிரம்ம சொரூபம் தானே

நிகிலருமாம் அதுவேநாம் அதுவே உண்மை

அட்ஷரமாம் பிரம்மமதே வேதாந் தங்கள்

அனைத்திற்கும் பொருளாகும் என்றிவ் வண்ணம்

தக்கபர நிர்ணயமே திடமாய்ச் செய்தல்

தளர்வையெல்லாம் தவிர்க்கின்ற விசாரமாமே!

கருத்து:

ஸ்ரீ சத்குருவின் முன்பாக தெளிவு பெற்ற ஞான பாடத்தை, அத்வைத சாதகர்கள் வசம் கேட்டு தெளிவு பெற்று

அனைத்தும் ஒன்றே

அதுவே சுகம்

அதுவே யாம்

அதுவே நீ

என அனுபவ சித்தமானால் சந்தேகம், கலக்கம், பயம் வரவே வராது.

பாடல் : 72

சுருதியென்றும் ஸ்மிருதியென்றும் நூல்களென்றும்

சூட்சுமமாம் வேதாந்த நூல்களென்றும்

கருதும் இதிகாசமென்றும் புராண மென்றும்

காமிகமே முதலிய ஆகமங்க ளென்றும்

ஒருமையென்றும் இருமையென்றும் வொன்று மில்லை

உள்ளதெல்லாம் அகண்டபரப் பிரம்மம்தானாம்

பரவிய அப்பரப்பிரம்மம் நாமே என்று

பாவித்து பாவித்து பரமே ஆவாய்!

கருத்து:

சாஸ்திரம், வேதம், புராணம், இதிகாசம், ஆகமம் மற்றும் நூல்களும், விரித்துச் சொல்லும் 64 கலைகளும் நமக்கு அன்னியமாய் எதையும் சொல்லவே இல்லை.

அப்படி எதுவும் இருக்கவும் இல்லை. இப்பிரிவுகள் அனைத்தும் மனதே.

மனதை ஒன்றுபடுத்து, மனதை மஹத்தாக்கு. அதுவாகவே நீ இருப்பாய். இது சத்யம்!

பாடல் : 73

சித்தம் அல்லால் பிரபஞ்சம் என்றுமில்லை
சித்தம்தான் பிரபஞ்சம் எனவே தோற்றும்
சித்தம் அல்லால் சம்சாரம் என்றுமில்லை
சித்தம்தான் சம்சாரம் எனவே தோற்றும்
சித்தமதை சோதிக்கில் சித்தே ஆகும்
சித்தான சித்தமதே சிவமாய் நிற்கும்
சித்தம்இல்லா சின்மயமாம் சிவம்நாம் என்றே
சிந்தித்து சிந்தித்து சிவமே யாவாய்!

கருத்து:

சிந்திக்கும் சித்தமே உலகம். உன் சித்தமே சம்சாரம்.

மனதின் வடிவமே சித்தம். இந்த மனம் என்ற சித்தம் செயலற்று சித்தில் (நம்மில்) அடங்கிவிட்டால் அனைத்தும் சித்தே.

சித்தே சிவம், சிவமே நாம், நாமே சிவம் என சிந்தித்து சிந்தித்து சிந்தித்து சிவம் ஆவாய்!

பாடல் : 74

மனதையல்லால் ஜகமுதலோர் அணுவும் இல்லை

மனததுவே ஜகமுதலாய்த் தோற்ற லாகும்

சொனமனது சங்கல்ப வடிவே யாகும்

சோதிக்கின் சங்கல்பம் சித்தாய் தீரும்

மனதுடைய சங்கல்பம் சித்தாய் தீர்ந்தால்

மனததுதான் சின்மயமாம் சிவமே யாகும்

ஜனனமில்லா சின்மயமாம் சிவம்நாம் என்றே

சிந்தித்து சிந்தித்து சிவமே யாவாய்!

கருத்து:

உன் மனதையல்லால் ஜகம் இல்லை.

உன் மனதின் வடிவம் சங்கல்பம் (எண்ணம்).

அதை விசாரித்துப் பார்த்தால் சித்தாக முடியும்.

சித்தான சின்மயம் சிவம்.

அதுவே நாம் என சிந்தித்து சிந்தித்து சிந்தித்து சிவமாய் ஆகுவாய்!

பாடல் : 75

சின்மயமாம் எம்மிடையே மனது உதித்து

சின்மயமாம் எம்மிடையே மற்றும் இருந்து

சின்மயமாம் எம்மிடையே அடங்க லாலே

சின்மயமாம் எம்மையல்லால் மனதே இல்லை

சின்மயமாம் எம்மையல்லால் மனதில் லாததால்

சின்மயமாம் எம்மையல்லால் எவையும் இல்லை

சின்மயமாம் நாம் என்றும் சிவமே என்று

சிந்தித்து சிந்தித்து சிவமே யாவாய்!

கருத்து:

சின்மயமான எம்மிடத்தில் இந்த மனம் தோன்றிற்று. எம்மிடையே விளையாடியது. எம்மிடையே ஒடுங்கிவிட்டது.

இந்த தோற்றம், இருப்பு, மறைவு எம்மிடையே நிகழ்வதாலே எம்மையல்லால் எதுவும் இல்லை.

''யாம் சிவமே, யாம் சிவமே, யாம் சிவமே''

என சிந்தித்து அது ஆகுவாயாக!

பாடல் : 76

சின்மயமாம் எம்மையல்லால் சங்கல் பத்தின்

செயலான ஜகத்தோற்றம் எவையும் இல்லை

சின்மயமாம் எம்மையல்லால் சங்கல் பத்தின்

செயலான ஜீவேஸ்வர் யாரும் இல்லை

சின்மயமாம் எம்மையல்லால் சங்கல் பத்தின்

செயலொன்றும் ஒருகாலும் இலவே இல்லை

சின்மயமாம் நாம்என்றும் சிவமே யென்று

சிந்தித்து சிந்தித்து சிவமே யாவாய்!

கருத்து:

சின்மயமான எம்மிடம் மனோவடிவில் (எண்ண வடிவில்) இந்த ஜகம் தோன்றியது. இந்த ஜீவர்கள் தோன்றினார்கள். இந்த ஈஸ்வராதிகள் தோன்றினார்கள். அனைத்தும் எம்மிடத்திலே அடங்குகின்றன.

யாம் என்றும் சிவசொரூபமே

என சிந்தித்து சிந்தித்து சிந்தித்து சிவம் ஆவாயாக!

பாடல் : 77

சின்மயமாம் எம்மிடையே <u>கனவில்</u> <u>கண்ட</u>

ஜகமுதலாய் எமக்கயலாய் இலாததே போல்

சின்மயமாம் எம்மிடையே <u>நனவில்</u> <u>கண்ட</u>

ஜகமுதலாய் எமக்கயலாய் யென்றும் இல்லை

சின்மயமாம் <u>நாம்தானே</u> <u>என்றும்</u> <u>ஒன்றாய்</u>

<u>செறிந்தகில</u> <u>பூரணமாய்</u> <u>சிவமாய்</u> <u>நின்றோம்</u>

சின்மயமாய் <u>நாம்நாமாய்</u> நின்றோம் என்று

சிந்தித்து சிந்தித்து சிவமே யாவாய்!

கருத்து:

சின்மயமான எம்முன் உலகமும், உலக வஸ்துக்களும் தோன்றின என்று சொல்வதைவிட யாமே தோற்றுவித்துக் கொண்டோம்.

கனவையும் எம்முள்ளேயே உண்டு பண்ணிக் கொண்டோம். ''சங்கல்பமே உலகம், சங்கல்ப ரஹிதமே மோட்ஷம்'' என்றபடி

''<u>அனைத்தும்</u> <u>யாமே</u>''

என்று சிந்தித்து சிந்தித்து சிந்தித்து சிவம் ஆவாயாக!

பாடல் : 78

அகம்பிரம்மம் என்றுணரும் ஆத்ம ஞானம்

அதிதிடமாம் விவேகத்தால் ஜனிப்ப தாகும்

அகம்பிரம்மம் என்றுணரும் ஆத்ம ஞானம்

ஆசிரியன் கருணையினால் கிடைப் பதாகும்

அகம் பிரம்மம் என்றுணரும் ஆத்ம ஞானம்

அனவரதம் பழக்கத்தால் உரப்ப தாகும்

அகம்பிரம்மம் என்றுணரும் ஆத்ம ஞானம்

அகண்ட சிவம் கருணையினால் நிலைப்பதாகும்!

கருத்து:

அகம் பிரம்மம், ஜகம் பிரம்மம் என்ற மஹத்ஸத்தானது வைராக்கியத்தாலும், குரு கிருபையாலும், தைலதாரை போல் சிந்திப்பதாலும், இஷ்ட தெய்வத்தில் (சிவமே அது) பரிபூரண சரணாகதியினாலும் தான் சித்திக்கும்.

நிலைத்து நிற்கும். அனுபவம் பெறலாம்.

பாடல் : 79

(அகம்பிரம்மம் ஜகம்பிரம்மம் என்ற)

வசனத்தை சப்தத்தால் உரைப்ப தற்கோர்

வருத்தமில்லை ஆதலினால் அசத்தரெல்லாம்

நிஜவடிவின் பாவனையில் மனது நின்று

நிச்சலமாய் அனுபூதி நிலைக்கு மட்டும்

பிசகறவே சர்வமுமே பிரம்ம மென்றும்

பிரம்மமதே நாம்என்றும் நாம்அது வென்றும்

அசலமதாம் அகண்டான்ம சொரூபம் தன்னை

அறிவிக்கும் சப்தத்தை உரைக்க வேண்டும்!

கருத்து:

''அகம் பிரம்மம் ஜகம் பிரம்மம்''இதை வாக்கால் சொல்வதற்கும் வருத்தம் இல்லை. அலைமனது அசையாமல் ஸ்வயமாக நிற்கும் பரியந்தம் ஸ்மரணை செய்து கொண்டே வரவேண்டும்.

இது அனுபவ சாத்தியமானால் உடல் உலக உணர்ச்சிகள் (குணங்கள்) எழாது. எந்த வினாடியும் அமைதியும், சாந்தியும் நிலவும்.

அமைதி எண்ணத்தில்; சாந்தி பார்வையில்.

பாடல் : 80

மாரணமில் அறிவான பிரம்மம் அல்லால்

மாயையில்லை அவித்தையில்லை மற்றொன்றில்லை

சீரணமில் அறிவான பிரம்மம் அல்லால்

ஜீவனில்லை ஈசனில்லை ஜகத்தும் இல்லை

பூரணமாம் அறிவான பிரம்மம் அல்லால்

பொய்யுமில்லை மெய்யுமில்லை பிரிதொன்றில்லை

காரணமாம் அறிவான பிரம்மம் அல்லால்

காரியமாய் காண்கின்ற தெவையும் இல்லை!

கருத்து:

மறைப்பில்லாத அறிவான பிரம்மத்தை தவிர மாயையோ, அவித்தையோ இல்லை.

தெளிவான அறிவான பிரம்மத்தை தவிர ஜீவனோ, ஈசனோ இல்லை.

பரிபூரணமான அறிவான பிரம்மத்தைத் தவிர மெய்யோ, பொய்யோ இல்லை.

அனைத்துக்கும் காரணமான பிரம்மம் ஒன்றே உள்ளது.

''அது நீயே, நீயே அது''

பாடல் : 81

பிரம்மமதே மும்மூர்த்தி யெனவும் தோற்றும்
பிரம்மமதே மூலசிவம் எனவும் தோற்றும்
பிரம்மமதே ஐம்பூதம் எனவும் தோற்றும்
பிரம்மமதே அனந்த உலகெனவும் தோற்றும்
பிரம்மமதே சராசரமாய்த் தோற்றலாகும்
பிரம்மமதே சகலமுமாய் தோற்றலாகும்
பிரம்மமலாது ஒருபொருளும் என்றும் இல்லை
பிறங்கியிடும் பொருளெல்லாம் பிரம்மம் தானே!

கருத்து:

பரப்பிரம்மமே பஞ்ச கர்த்தாக்களாகவும், ஆதிமூல சிவமாகவும், பஞ்ச பூதங்களாகவும், சர்வ சராசரமாகவும், அனைத்துமாகவும் இருக்கிறது என உணர்!

''அதுவே நீ, நீயே அது''

பாடல் : 82

சகலமுமாம் இவைவேறு நாம்தாம் வேறு

சற்பிரம்மம் வேறென் றெண்ணும் பேதபுத்தி

அகிலமுமே அகண்டபரப் பிரம்ம மென்றும்

அதுதானே நாம்என்றும் நாம் அதுவென்றும்

வெகுதிடமாம் அகண்டபர நிச்சய த்தால்

வேறறவே எளிதாக நீங்கும் அன்றி

இகழ்வு தரும் கருமஉபாசனையா லொன்றும்

இயம்பிய இப்பேதமதி யெளிதில் நீங்கா(து)!

கருத்து:

ஜகம் வேறு, நாம் வேறு, பிரம்மம் வேறு என்ற பேத புத்தியானது,

அனைத்தும் அந்த ஒன்றே

அது நலமாகிய சிவமே

அது நாமே, நாமே அது

என்ற அகண்டபர நிச்சயத்தால் நீங்குமன்றி எந்த கர்ம, தர்ம, உபாசனையினாலும் நீங்கவே நீங்காது.

பாடல் : 83

அகம்பிரம்ம நிச்சயமே அகத்திலுள்ள

அஞ்ஞான சந்தேகம் அனைத்தும் போக்கும்

அகம்பிரம்ம நிச்சயமே அகத்திலுள்ள

அனேகவித விபரீத தோஷம் நீக்கும்

அகம்பிரம்ம நிச்சயமே ஆன்மா வின்கண்

அசஞ்சலமாய் அமர்கின்ற சமாதி நல்கும்

அகம்பிரம்ம நிச்சயமே பதிபந்தங்கள்

அணுவுமில்லா அபரோட்சு ஞானம் நல்கும்!

கருத்து:

அகம் பிரம்மம் ஜகம் பிரம்மம் என்ற திட நிச்சயமே அறியாமையை போக்கும்.

சந்தேகத்தை நீக்கும். விபரீத தோஷம் நீக்கும்.

ஆவரண மயக்கத்தையும், விட்ஷேப கலக்கத்தையும் போக்கும்.

உன் யதார்த்த சொரூபத்தில் நிலைக்க வைத்து அனுபூதியை கூட்டி வைக்கும்.

பாடல் : 84

சிவனென்றும் ஹரியென்றும் விரிஞ்ச னென்றும்

சிருஷ்டியென்றும் ஸ்திதியென்றும் நாசமென்றும்

தவமென்றும் ஜபமென்றும் தீர்த்த மென்றும்

தானமென்றும் தெய்வமென்றும் சேவையென்றும்

கவருற்ற மயக்கங்கள் வொன்று மில்லை

களங்கமில்லா பிரம்மமெல்லாம் அதுநாம் என்றே

அவமற்ற உறுதியினால் அனைத்தும் தள்ளி

அசஞ்சலமாய் ஆன்மாவில் அமர்ந்து நிற்பாய்!

கருத்து:

உலகின் கர்த்தாக்கள் மூவரென்றும், அவர்களின் முத்தொழில்கள் என்றும், தவம், ஜபம், தானம், தர்மம், தெய்வம், சேவையென வசீகரத்தால் மனதைக் கவரக் கூடிய மயக்கம் எதுவும் இல்லை.

''அனைத்தும் பிரம்மமே'' (ஆத்மாவே)

என உறுதியான எண்ணத்தினால் உன் ஆத்ம ஸ்வரூபத்தில் நிலைத்து நிற்பாயாக!

பாடல் : 85

பலவிதமாம் மந்திரமும் தூரத் தள்ளி

பஞ்சமகா அட்ஷரமும் தூரத் தள்ளி

இலகிய அஷ்டாட்ஷரமும் தூரத் தள்ளி

இவைஓதும் குருவையுமே தூரத் தள்ளி

நிலைமருவா வசனமெல்லாம் தூரத் தள்ளி

நிகழ்த்தியிடா மௌனமுமே தூரத் தள்ளி

அலைமனதின் விகற்பங்கள் அனைத்தும் தள்ளி

அசஞ்சலமாய் ஆன்மாவில் அமர்ந்துநிற்பாய்!

கருத்து:

சதகோடி மந்திரங்களையும், பஞ்சாட்ஷரத்தையும், அஷ்டாட்ஷரத்தையும், இவைகளை கற்றுக் கொடுக்கும் குருதேவரையும், வசனமாக சொல்லும் வாய் ஞானத்தையும், மனதை அசைக்கக்கூடிய அனைத்தையும் அகற்றி

''அதுவே நாம், நாமே அது''

என நிலைத்து நிற்பாயாக!

பாடல் : 86

காமமொடு கோபமுதல் அனைத்தும் தள்ளி

கர்வமுடன் டம்பமுதல் அனைத்தும் தள்ளி

தோமருவு மோகமுதல் அனைத்தும் தள்ளி

துவைதமொடு அத்வைதம்முதல் அனைத்தும்தள்ளி

நாமமொடு உருவமுதல் அனைத்தும் தள்ளி

நாம்பிறர் என்றிவைமுதலாம் அனைத்தும்தள்ளி

ஆமல என்றறிவுற்ற தனைத்தும் தள்ளி

அசஞ்சலமாய் ஆன்மாவில் அமர்ந்து நிற்பாய்!

கருத்து:

காம, குரோத, லோப,மோக, மத, மாச்சரியம்(சந்தேகம்) ஆகிய அறுவரையும்,

இரண்டு, ஒன்று என்ற பேதத்தையும்,

அவன், அவள், அது, இது, நாம், பிறர் என அறிவைக் குலைக்கின்ற அனைத்தையும் அகற்றி, இவை

அனைத்தும் அந்த ஒன்றே

''அதுவே நாம், நாமே அது''

என அளவற்ற ஆன்ம ஸ்வரூபத்தில் நிலைத்து நிற்பாயாக!

பாடல் : 87

நிரந்தரமாம் அறிவான எம்மிடத்தில்

நிகிலமுமே கற்பிதமாய் தோற்ற லாலே

பொருந்திய அக்கற்பிதமாம் தோற்ற மெல்லாம்

பூரணமாம் அறிவான அகமே யென்றும்

விரிந்தஅறி வானஅகம் பிரம்மமென்றும்

வேறற்ற அபேதபர ஞானத்தாலே

அருந்தவனே! பேதமதி அனைத்தும் தள்ளி

அசஞ்சலமாய் ஆன்மாவில் அமர்ந்து நிற்பாய்!

கருத்து:

காலாதீதமான அறிவு சொரூபமான எம்மிடத்தில் அனைத்து உலகமோ, உயிரினங்களோ, வஸ்துக்களோ கற்பனையாகத் தோற்றுவதால் அனைத்தும் யாமாகவே இருக்கிறோம்.

எமக்கு அன்னியம் எதுவும் இல்லை என உறுதியுடன் உன் ஆத்ம ஸ்வரூபத்தில் அசையாமல் இருப்பாயாக!

பாடல் : 88

சத்தியமாய் ஜகத்துமுதல் இருக்கு மாகில்

சலனமற சுழுப்தியிலும் இருக்க வேண்டும்

இத்தனையும் சுழுப்திதனில் இலாமை யாலே

இவையாவும் கனவெனவே மித்தை யென்றும்

நித்தியமாய் நின்றஅகம் பிரம்ம மென்றும்

நிர்மலமாம் அபேதபர ஞானத் தாலே

அத்திரமாம் பேதமதி அனைத்தும் தள்ளி

அசஞ்சலமாய் ஆன்மாவில் அமர்ந்து நிற்பாய்!

கருத்து:

உலகமும், உலக வஸ்துக்களும் உண்மையில் இருக்கிறது என்றால் ஆழ்ந்த உறக்கத்திலும் அது இருக்கவேண்டும்.

அங்கு அது இல்லாமையால் இவை அனைத்தும் கனவு என முடிவு பண்ணி பேதத்தை நீக்கி அபேத உணர்வோடு

அனைத்தும் அந்த ஒன்றே

''அது நாமே, நாமே அது''

என உறுதியுடன் இருப்பாயாக!

பாடல் : 89

மனதுடைய விருத்தி உதிப்பதற்கு முன்னும்

மற்றந்த விருத்தி நசித்திட்ட பின்னும்

தினையளவும் இல்லாத (இச்) ஜகஜீவாதி

தியங்கும் மனோவிருத்தியினால் மத்தியத்தில்

கனவதுவாய் இருப்பதெனத் தோற்றி னாலும்

களங்கமறச் சோதிக்கின் இல்லை யென்றே

அனியமெல்லாம் அத்யந்த நேதி பண்ணி

அசஞ்சலமாய் ஆன்மாவில் அமர்ந்து நிற்பாய்!

கருத்து:

மன எண்ணத்தால் ஜகம் தோற்றிற்று. மன மறைப்பினால் ஜகம் மறைந்தது.

இந்த மனம் என்பது இல்லாத ஒன்று. இடையில் வந்த மனமும், அதன் தோற்றமும் கனவு என முடிவு பண்ணி.

அனைத்தும் அந்த ஒன்றே

''அது நாமே, நாமே அது''

என உறுதியுடன் நிற்பாயாக!

பாடல் : 90

கடமடமென்று உணர்வுற்ற உபாதி நீங்கில்

கடவிண்ணும் மடவிண்ணும் ஒன்றே போல

மடமை முதல் ஜீவபர உபாதி நீங்கில்

மாசற்ற ஜீவபரம் இரண்டும் வொன்றென்று

திடமருவும் ஊகத்தால் பரஜீ வைக்கியம்

இயல்புதனை இருமையற அறிந்தே அத்தால்

அடரும் அகண்டாகார சொரூப மாகி

அசஞ்சலமாய் ஆன்மாவில் அமர்ந்து நிற்பாய்!

கருத்து:

குடத்திற்குள் இருப்பது குட ஆகாயம் என்றும், எங்கும் வியாபகமாக இருப்பது மக ஆகாயமென்றும் பொருள். இங்கு குடம் பேதமாகவும், உபாதையாகவும் இருக்கிறது. குடம் உடைந்தால் இரண்டும் ஒன்றே.

அதே போல் சரீரமாகிய கூட்டுக்குள் ஆத்மா பந்தப்பட்டு இருப்பதால் ஜீவன் என்றும், வெளியே எங்கும் வியாபகமாக இருப்பதால் அதை பரமாத்மா என்றும், பரம் என்றும் சொல்கிறோம்.

அறியாமை (ஜீவ போர்வை) நீங்கினால் கூடஸ்த ஆன்மாவும், வெளியே உள்ள பரமாத்மாவும் (பரமும்) ஒன்றாகி விடும். ஆதலால் உன் அறியாமையை நீக்கி அகண்டப் பேரொளியில் கலந்து விடுவாயாக!

பாடல் : 91

''சிவோஹம்'' எனச் சொல்லியிடும் வாக்கியத்தில்

சோதித்து விருத்தாம்சம் நீங்கும் போதங்கு

ஆயஜக ஐக்கியமே அறியும் அர்த்தம்

அவ்விதமே ''தத்துவம் அஸி'' வாக்கியத்துள்

ஏகமதாம் விருத்தாம்சம் அனைத்தும் நீக்கி

இயல்பான ஐக்கியமே அறிந்தே யத்தால்

ஆயமனோ பேதமெல்லாம் இழந்து எப்போதும்

அசஞ்சலமாய் ஆன்மாவில் அமர்ந்து நிற்பாய்!

கருத்து:

'சிவோஹம்'' என்றால் சிவம்+அஹம் ; சிவமே நாம் என பொருள். இதைத்தான் ''தத்துவம் அஸி''விளக்குகிறது.

உடல்,உலகமாகப் பார்த்தால் உண்மை (சத்யம்) மறைந்து விடும். உண்மையாகப் பார்த்தால் உடல், உலகம் மறைந்து விடும் (நாயை கண்டால் கல்லைக் காணோம். கல்லைக் கண்டால் நாயை காணோம்).

இதைப் போல் பேதத்தை நீக்கி அறியாமையை போக்கி மனதை ஸ்திரமாக்கி பார்த்தால் அங்கு ஜீவன் என்றும் பிரம்மம் என்றும் பேதம் நீங்கி விடும். அப்படி ஒன்றுபடுத்தி

''அதுவே நீயாய், நீயே அதுவாய்''

ஆகுவாயாக!

பாடல் : 92

கற்பிதமாம் ஜீவபர உபாதி யெல்லாம்

களங்கமற விசாரித்து நேதி செய்து

தற்பத லட்ஷியமான பிரம்ம ரூபம்

துவம்பத லட்ஷியமான நாமேஎன்று

நிர்பயமாய் அகண்டார்த்த போதம் பெற்று

நீக்கவொண்ணா பவபந்தம் அனைத்தும்நீக்கி

அற்பமில்லா அகண்டார்த்த வடிவே யாகி

அனவரதம் ஆன்மாவில் அமர்ந்து நிற்பாய்!

கருத்து:

முன் பாடலில் கூறியபடியே துவம்பத லட்சியார்த்தமான கூடஸ்த பிரம்மமும், தற்பத லட்சியார்த்தமான பரப்பிரம்மமும் வேறு என்பதை பயம் இல்லாமல், கலக்கம் இல்லாமல் நீக்கி பவம், பந்தம், சொந்தம் என்ற அறியாமையை போக்கி அது நீயாக ஆகுவாயாக!

பாடல் : 93

சேத்தியமாய் செறிவுற்ற தோற்றம் யாவும்
சின்மாத்ரமான பரசிவமே யென்றும்
வேத்தியமோர் அணுவுமில்லாச் சிவம்நாம் என்றும்
வேறற்ற நாம்அந்த சிவமே என்றும்
சாத்தியமாம் பாவனையால் அகண்ட போதம்
சார்ந்ததனால் சம்சார பாசம் நீங்கி
நேத்திரமாம் பரமசிவ அபின்ன மான
நினதான்ம மாத்திரமாய் நிலைத்து நிற்பாய்!

கருத்து:

உடல் உலகமாக தோற்றிய யாவும் அந்த சித் சொரூபமாகிய பரமே என உறுதியோடு நிச்சயம் பண்ணி நாம் சம்சாரி, நாம் குடும்பி என்ற மயக்கத்தை உடைத்து தூள்தூளாக்கி சுத்த சிவமாக ஆகி உன்னில் நிலைத்து நிற்பாயாக!

பாடல் : 94

மனதுமுதல் அனைத்துக்கும் அதீத மாகி
மாயை மகதாதி கட்கும் அதீத மாகி
நனவுமுதல் அவஸ்தை கட்கும் அதீதமாகி
நாமம்உரு எவைகட்கும் அதீத மான
அனகபரப்பிரம்ம மல்லால் அணுவும் இல்லை
அகிலமுமே அகண்டபரப் பிரம்ம மென்றும்
கனஅறிவாம் பரப்பிரம்மம் நாமே என்றும்
கலங்காத பாவனையால் மனதை வெல்வாய்!

கருத்து:

இல்லாத மனதிற்கும், இருப்பை காட்டும் மாயைக்கும், மயக்கும் நாம ரூபத்திற்கும் ஆனந்த பிரம்மத்தை தவிர ஆதாரம் வேறு எதுவும் இல்லை.

ஆகவே காண்கின்ற அனைத்து உலகமும் அந்த ஒன்றே; அந்த ஒன்றே அனைத்து உலகமும்;

''அதுவே நாம், நாமே அது''

என உறுதியோடு ஆனந்தத்தில் நிலைத்து நின்று மாயமனதை வெல்வாயாக!

பாடல் : 95

சுத்தசிதா காயமதாம் நிஷ்பிர பஞ்ச

சொரூபத்தில் பிரபஞ்சம் என்றும் இல்லை

இத்துவைத பிரபஞ்சம் பரமார்த் தத்தில்

இறையளவும் இலதேனும் விவகாரத்தில்

சித்தினுடைய விவர்த்தமதாம் சித்தம் தாமே

செறிகின்ற பிரபஞ்சம் எனவே தோன்றும்

புத்திரா! அச்சித்தத்தை(யாம்) புகன்ற வண்ணம்

பூரணமாம் பாவனையால் நாசம் செய்வாய்!

கருத்து:

சிதாகாயமாகிய சுத்தத்தில் கானல் நீரைப் போன்று பிரபஞ்சம் தோன்றியது. உண்மையில் பிரபஞ்சம் இல்லை.

விவகாரத்தில் பேசப்படும் உலகம் சித்தின் விளையாட்டே. அதை சித்தம் உலகமாக காட்டுகிறது.

அச்சித்தத்தை உன் சித் சொரூபமாக (பரமாக) பார்க்கப் பழகிவிட்டால், மனோ நாசம் ஆகிவிடும். நீ ஆனந்தமாகவே இருப்பாய்!

பாடல் : 96

இருமையில்லா சுழுப்தியினில் ஏகமாக

இருக்கின்ற ஆன்மாவே தம்மி டத்தில்

மருவியிடும் (மாயா) சக்தியினால் கனவின் கண்ணே

மனமுதலாய்த் தோற்றியிடும் நீதி போல

ஒரு வடிவாய் உள்ள பரப்பிரம்மம் தானே

ஒன்றிய தம்சக்தியினால் சித்தம் போலாய்

சர்வஜக ஜீவபர வடிவ மாகச்

சஞ்சலமாம் விவகார தசையில் தோன்றும்!

கருத்து:

ஆழ்ந்த உறக்கத்தில் ஏகமாக இருக்கும் ஆன்மா தம்மிடம் உள்ள மாயா சக்தியால் மனமாக தோன்றி கிரீடிப்பது போல, ஒரு வடிவமான ஆன்மாவே தம் சக்தியினால் சித்தம் போல தோற்றி ஜகத் ஜீவ பரமாக விவகாரத்தில் தோற்றும்.

ஆனால் உண்மையில் இலவே இல்லை.

பாடல் : 97

அகம்பிரம்ம பாவனையால் மாயா மோகம்

அகிலமுமே நசிக்கும் இதில் ஐயமில்லை

அகம்பிரம்ம பாவனையால் மனக் கிரந்தி

அகிலமுமே நசிக்கும் இதில் ஐயமில்லை

அகம்பிரம்ம பாவனையால் ஆதி வியாதி

அகிலமுமே நசிக்கும் இதில் ஐயமில்லை

அகம்பிரம்ம பாவனையால் அத்தியாசம்

அகிலமுமே நசிக்கும் இதில் ஐயமில்லை!

கருத்து:

''அகம் பிரம்மம், ஜகம் பிரம்மம்''

என்ற உண்மையான பாவனையினால் மாயா மோகம், மனக் கிரந்தி(மன முடிச்சு), ஆதி வியாதி, சந்தேகம், பயம், துக்கம் முதலிய அனைத்தும் நீங்கி விடும்.

இதில் சந்தேகமே வேண்டாம்.

பாடல் : 98

சர்வமுமே பிரம்மமெனப் போதித் தாலும்

சந்ததமும் சுருதிமுடிப் படிப்புற்றாலும்

பரமசிவம் கருணையில்லா வெறும் மூடர்க்கு

பலகால வாதனையால் மீண்டும் மீண்டும்

இருமையென இதயத்தில் தெரிவ தன்றி

யாவையுமே பிரம்மமெனத் தெரிவ தில்லை

அரியவனே! ஆதலினால் முமுட்சு வெல்லாம்

அகண்டபர சிவகருணை அடைய வேண்டும்!

கருத்து:

ஆத்ம ஞான பாடம் எத்தனை போதித்தாலும், விளக்கமாக கேட்டாலும் இறை பக்தியில்லா (முழு சரணாகதி அடையாத) மூடர்களுக்கு அனுபவமாகாது. இது ஸத்யம்!

பாடல் : 99

அகம்பிரம்மம் என்று உரமாம் நிச்சயித்து

ஆக்கைமுதல் அகமென்னும் நினைவைத்தள்ளு

ஜகம்பிரம்மம் என்று உரமாம் நிச்சயித்து

ஜகத்தை யெல்லாம் உண்மையெனும் நினைவைத்தள்ளு

அகம்பிரம்மம் ஜகம்பிரம்மம் யென்றிவ் வண்ணம்

அநவரதம் தொடர்பாக நிச்சயிக்கில்

ஜகம்பரம்நாம் என்னும்மயல் துயில்வோன் கையில்

செறிகின்ற மலரெனவே சுயமாய் நீங்கும்!

கருத்து:

உடலை நாம் என்றும், உலகை நம்முடையது என்றும் அறியாமையால் நம்பியிருக்கும் நீ

''அகம் பிரம்மம், ஜகம் பிரம்மம்''

என உறுதியுடன் நிச்சயித்தால் உன் அறியாமையும், அகங்காரமும் தூங்குபவன் கையில் உள்ள பூ எப்படி நழுவி விடுமோ, அப்படி உன்னை விட்டு நழுவி சென்று விடும். இது உறுதி!

பாடல் : 100

வானமுதல் பூதமில்லை புவன மில்லை

வகுக்கின்ற ஈசனில்லை ஜீவனில்லை

நானும் இல்லை நீயும்இல்லை யாரும் இல்லை

நாமமில்லை ரூபமில்லை யென்றும் யெல்லாம்

ஞானகனமான பரப்பிரம்ம மென்றே

ஞானநிலை பெறுமளவும் நிச்சயித்தால்

பானமுறும் பேதமயல் பாத வத்தின்

பக்குவத்தின் பழமெனவே சுயமாய் நீங்கும்!

கருத்து:

ஆகாய முதல் ஐந்து பூதமோ, புவனமோ அதை சிருஷ்டிக்கும் ஈசனோ, அங்கு வசிக்கும் ஜீவனோ, இதை சொல்லும் யாமோ, கேட்கும் நீயோ இல்லவே இல்லை.

அனைத்தையும் விளக்கும் நாம ரூபமோ இலவே இல்லை.

அனைத்தும் அந்த ஒன்றே

''அது நாமே, நாமே அது''

என்ற பூரண ஞானம் சாத்தியமாகும் வரை உறுதியாக நீ இருந்தால், மரத்தில் பழுத்த பழம் எப்படி தாமாக கழன்று கீழே விழுமோ அப்படி உன் மனம் உடல் உலக பிடிப்பை விட்டு விலகும்.

பாடல் : 101

தினம்தவிரா இயற்றியிடும் கர்மமென்றும்

திடமாக செய்கின்ற பக்தியென்றும்

அனந்தவித தெய்வ உபாசனைகளென்றும்

அத்தெய்வ மூர்த்திகளின் பூஜையென்றும்

மனந்தனிலே மருவிய இத்தோற்றமெல்லாம்

மகத்தான பரப்பிரம்ம சொருபமென்றே

கனந்தவிரா அகண்டபர நிச்சயத்தால்

களங்கமில்லா பரப்பிரம்ம மாத்திரமாவாய்

கருத்து:

நித்திய கர்மாக்கள் என்றும், இறை பூஜையென்றும், மந்திர உபாசனைகள் என்றும் விதவிதமாகத் தோற்றும் இவை எல்லாம் காலாதீதமான அந்த ஒன்றே,

''அது நாமே, நாமே அது''

என உறுதி நிச்சயமானால் நீ அதுவாகவே இருப்பாய். இது உறுதி!

பாடல் : 102

புரையற்ற <u>நிருபாதி</u> சொரூபம் தானே

புகலும்மகா வாக்குகளின் <u>பொருளாமன்றி</u>

பிரிவுற்ற <u>சோபாதி</u> சொரூப மென்றும்

பேசும்மகா வாக்குகளின் <u>பொருளன்றென்றே</u>

விரிவுற்ற இவைமுதலாம் தோற்ற மெல்லாம்

விமலதாம் பரப்பிரம்ம சொரூப மென்றே

தெரிவுற்ற அகண்டபர நிச்சயத்தால்

தியக்கம் இல்லா பரப்பிரம்ம மாத்திரமாவாய்!

கருத்து:

குற்றமற்ற, எந்த உபாதிகளும் அற்ற பிரம்ம சொரூபமே அனைத்தையும் விளக்கி <u>தாம் தாமே</u> நிற்கும்.

பேதப்பட்டு அனைத்து உபாதியோடு கூடி இருக்கின்ற <u>நாம ரூப குணம்</u> உடைய அனைத்து தோற்றங்களும் அதற்கு அப்பால் இல்லை என முடிவு செய்து <u>உண்மையிலேயே</u> நிலைத்து நிற்பாயாக!

நீ அதுவாகவே இருப்பாய்! இது உறுதி.

பாடல் : 103

சருவமுமே பரப்பிரம்ம சொரூப மென்றே
சகலமறை முடிவுகளும் சாற்றலாலும்
பிரிவறவே பரப்பிரம்ம ஞானம் பெற்ற
பெரியோரும் இவ்விதமே பேசலாலும்
இருளறவே பரசிவமும் எமக்கு முன்னம்
இவ்விதமே அருள்செய்த இயல்பினாலும்
உரைதரும்இவ் அகண்டபர நிச்சயத்தில்
ஓரணுவும் ஐயமில்லை உறுதி ஈதே!

கருத்து:

சகல வேத, புராண, இதிகாசங்களும் இந்த உண்மையையே சொல்வதாலும், பிரம்ம ஞானிகளும் (சத்துக்களும்) இப்படியே சொல்வதாலும், எம் குருதேவராகிய பரசிவமும் இப்படியே சொல்வதாலும் நீயும் இந்த அகண்டபர நிச்சயத்தினால் அதுவாகவே ஆகுவாய் என ஆசி கூறுகிறோம்!

பாடல் : 104

நாமம்உரு யாவையுமே பிரம்ம மென்றும்

நாமந்த பரப்பிரம்மம் தாமே யென்றும்

சேமமுறச் செப்பியஇவ் அர்த்தம் தன்னில்

சிறிதேனும் சங்கையில்லை சத்தியம்தான்

நாமமெல்லாம் கடந்தெங்கும் நிறைவாய் நின்ற

தத்துவமாம் சிவம்ஆணை உண்மை சொன்னோம்

ஆமல என்றணுவும் இதில் சங்கியாமல்

அறைந்த வண்ணம் அதிதிடமாய் நிச்சயிப்பாய்!

கருத்து:

நாம ரூப குணம் குறி கடந்த ஒன்றே நம் அனுபவத்திற்காக நாம ரூபம் தாங்கி வந்திருக்கிறது என மெய் அறிவால் உணர்ந்து எங்கும், எதிலும், எக்காலத்தும் பேதம் காணாமல் உண்மை உணர்வாக நின்றால் நீ அதுவாகவே இருப்பாய்! இது உறுதி.

பாடல் : 105

நின்னிடையே நிச்சலமாய் நிலைத்து நிற்கும்

நிலைமையதே நிகரற்ற மோட்ஷ மாகும்

தன்னிடையே தானாக தனித் திடாமல்

தரங்கமென சலிப்பதுவே பந்த மாகும்

உன்னியிடில் ஓர்உருவாய் உன்னை யன்றி

உலைவுதரும் காரணமோர் அணுவுமில்லை

தன்னியனே ஆதலினால் நீயெப் போதும்

தன்னிடையே தானாகத் தனித்து நிற்பாய்!

கருத்து:

நாம ரூப குணத்தில் மயங்காமல், கலங்காமல் உன்னில் நீ நிலைத்து நிற்பதுவே மோட்ஷமாகும்.

சலனமே பந்தம். நிச்சலனமே மோட்ஷம்.

இதைத் தவிர வேறு சாதனை வேண்டாம்.

பாடல் : 106

தன்னிடையே தானாகத் தனிப் பதற்குத்

தனக்கயல்போல் தோற்றியிடும் தோற்றமெல்லாம்

அன்னியமாய் ஒருகாலும் இல்லை யென்றும்

அகிலமுமே ஆன்மாவாம் அதுநாமே யென்றும்

பின்னமில்லா அகண்டபர நிச்சயத்தை

பெறுவதுவே காரணமாம் ஆதலாலே

பன்னியவாறு அகண்டபர நிச்ச யத்தை

பற்றியதால் பகுப்பற்ற பரமே யாவாய்!

கருத்து:

உன்னில் நீ நிலைத்து நிற்பதற்கு உனக்கு அயலாக காணும் நாம ரூபத்தை

<u>அனைத்தும் ஒன்றே</u>

<u>அது சுகமே</u>

<u>அது யாமே</u>

என்று உறுதியாக நிற்பதுவே முடிந்த முடிவாகும்.

பாடல் : 107

நிச்சலமாம் நிச்சயமே அகண்டானந்த
நிலைமைபெற நிகரற்ற ஏதுவாகும்
உச்சமதாம் நிச்சயமே செய்யச் செய்ய
உலகுமுதல் துவைதத்தின் தோற்றம் நீங்கும்
துச்சமதாம் துவைதத்தின் தோற்றம் நீங்கில்
துகளற்ற ஆனந்தம் சுயமாய்த் தோன்றும்
அச்சமில்லா நிச்சயமே செய்திங் கத்தால்
அகண்டபர மானந்தம் அடைந்து வாழ்வாய்!

கருத்து:

முந்திய பாடலில் சொன்னபடி நிச்சயம் வழுவாது நீ உறுதியுடன் நின்றால் உடல் உலக துவைத தோற்றம் உன் சாதனையை அனுசரித்து விலகும். அங்கு பயம் இல்லை.

உறுதியுடன் நின்று ஆத்மானந்தம் பெற்று பூரணமாக ஆவாயாக!

பாடல் : 108

மாதவனே இந்நூலைக் கேட்கத் தக்க
மாசற்ற மாணாக்கன் அரிய வன்தான்
சாதகமாய் யிந்நூலை உபதே சிக்கும்
சத்குருவும் சாலவுமே அரிய வன்தான்
பேதமுறா இந்நூலின் புத்த கத்தை
பெற்றவரும் மெத்தவுமே அரிய வராவர்
ஓதியஇவ் வேதுவினால் இந்நூல் எங்கும்
உரமாக பிரசித்தி மேவ வில்லை!

கருத்து:

குழந்தாய்!

இந்த அத்வைத நூலை கேட்கத்தக்க குற்றமற்ற மாணவன் கிடைப்பது மிக மிக அரிதாகும். அதே போல் அந்த உண்மையை உணர்ந்து சுய அனுபவத்தோடு உணர்த்தும் சத்குருவும் மிக மிக மிக அரிதாகும்.

இந்த ஞானம் பெற்று சுயமாக அனுபவ ஞானியாக இருப்பது கடினமாக இருப்பதால் திரிலோகத்தில் ஒரு ஞானி என எம் அண்ணல் (கண்ணன்) கீதாவாசகமும் மற்றும் சத்துக்கள் வாசகமும் இருப்பதால் இந்த ஞான நூல் எங்கும் பிரசித்தி பெறவில்லை.

காரணம்:- துவைத நூல் கோடானு கோடி இருக்கிறது. அதில் பார்ப்பவன், பார்க்கும்பொருள்; கேட்பவன், கேட்கும் ஒலி; அறிபவன், அறியும்பொருள்; உணர்பவன்,

உணரும் பொருள் ; பேசுபவன், பேச்சின் அர்த்தம் என இரண்டு உண்டு. இது பேரானந்தமே அதாவது பெயரளவில் ஆனந்தமே.

ஆத்ம ஞானம் தாம் தாமாக இருப்பதால் மேலே சொன்ன ஐந்துக்கும் இடம் இல்லை. இங்கு எல்லாமே மௌனமாகி விடும். இதுவே பிரம்மானந்தம். நாம் அதுவாகவே இருப்போம். இங்கு எந்த விளக்கமும் கிடையாது.

அனுபவம் தனியாக இல்லாமல் தாம் தாமாகவே இருப்பதால் பந்த தர்மத்திலும், தெய்வ தர்மத்திலும் இருப்பவர்கள் தாமே தர்மமாக சத்தியமாக இருக்க விரும்ப மாட்டார்கள். ஆகவே இந்நூல் பிரசித்தி பெறவில்லை. ஆனால் அது தோஷமும் இல்லை.

கருத்து:

குழந்தைகளே!

இதில் கொடுத்த 108 பாடல்களும் ஸ்ரீரிபு முனிவர் தம் சிஷ்யனாகிய நிதாகனுக்கு சொல்லிய (அத்யாயம்:44 பாடல்கள்: 1924) பாடல்களில் எம் ஸ்ரீகுருதேவர் வியாச பிரான் சொல்லித் தொகுத்ததாகும்.

இனி நிதாகனின் அனுபவ வசனத்தையும் அப்பாடல்களில் இருந்து பிரித்து தருகிறோம். உணர்ந்து, அனுபவித்து, அது ஆகுவீர்களாக என ஆசி கூறி வாழ்த்துகிறோம்!

# நிதாகன் அனுபவம்

பாடல் : 109

அறியவொண்ணா பெருமையுறும் போதம் பெற்ற

குருதேவா நினதுதிட கருணையாலே

சிறியமதி பொருந்திய யாம் சிறுமை நீங்கி

சின்னமில்லா அகண்டபரி பூரணமானோம்

பெறஅரிதாம் நின்னுடைய தரிசனத்தால்

பிறவிஇதில் பெறுவதெல்லாம் பெற்றோனானோம்

உறஅரிதாம் உனதருளால் செய்வ தெல்லாம்

ஊனமறச் செய்து முடித்தோனு மானோம்!

கருத்து:

குருதேவா!

உமது கருணையினால் புன்மை மதி நீங்கி இப்பிறவியின் பயன் பெற்று விட்டோம்.

ஒருவன் பிறந்தால் என்ன செய்ய வேண்டுமோ அதை செய்து முடித்து விட்டோம்.

பாடல் : 110

கருணையினால் அருளிய நின்உபகாரத்தில்

கைம்மாறு இவ்வுலகத்தில் எங்கு மில்லை

குருபரனே உமதுபய பாத(இ)ப் போதைக்கு

குறித்தடியேன் அனந்தவித வணங்கல் செய்வோம்

பரிவுடனே வணங்குதலும் உபசாரம் தான்

பரமார்த்த தசையிலொரு வணங்க லுண்டோ?

சருவமுமே பிரம்மமல்லால் பரமார்த் தத்தில்

சற்றுமொரு பேதமுமே இல்லை யன்றோ!

கருத்து:

குருதேவா!

உம் அளப்பரிய கருணையின் உபகாரத்தை என்ன வென்று சொல்வது?

உமது பாதத்தை வணங்கத்தான் எம்மால் முடியும். அதுவும் ஓர் உபசாரம் தான். பரமார்த்தத்தில் வணங்குதலும் இல்லையே.



8

பாடல் : 111

தேசிகா! நின்கருணையினால் யாம் அடைந்த

திவ்வியமாம் சுயஅனுபவ திருஷ்டி தன்னில்

பேசியிடும் யாமும்இல்லை நீயும்இல்லை

பெருமையுடன் பேசிய இந்நூலு மில்லை

பாசமுறும் ஜீவனில்லை ஈசன் இல்லை

பகுப்புற்ற பார்முதலாம் ஜகத்தே யில்லை

ஆசிரியா! அகிலமுமே அகண்டா கார

அத்வைத பிரம்மமல்லால் அயலே இல்லை!

கருத்து:

ஹே குருதேவா!

உம் சுய அனுபவத்தை உம் கருணையினால் யாம் பெற்றதனால் எமக்கு போதித்த உம்மையும் தனியாக காண முடியவில்லை.

அதைக் கேட்ட எம்மையும் தனியாக இருப்பதாக உணர முடியவில்லையே. ஒன்றை அன்றி அன்னியம் இல்லையே ப்ரபோ!

பாடல் : 112

சத்குருவே! நினதருளால் அகண்ட ஞான

சத்துருவாம் அஞ்ஞானம் அனைத்தும் நீங்கி

நிர்க்குணமாம் பரப்பிரம்ம ஞானம் பெற்று

நிகிலவித கருமத்தும் சிரத்தை யற்று

துர்குணமாம் பிரபஞ்சத் துண்மை நீங்கி

துவைதத்தால் தொடரும்பயம் அனைத்தும் நீங்கி

அட்ஷரமாம் பரப்பிரம்ம சொரூப மாகி

அயலற்ற அபயபதம் அடைந்தோ மன்றோ!

கருத்து:

ஹே பிரபோ!

உம்மால் யாம் அடைந்த அனுபவத்தினால் எம் அறியாமை (அஞ்ஞானம்) யாகிய கவனக்குறைவு நீங்கி, எந்த கர்மாவிலும் சிரத்தையில்லாமல், ஜனன, மரண பயம் நீங்கி அனைத்தும் எம்சொரூபமான ஆனந்தம் அடைகிறோம்!

பாடல் : 113

குருவர நின்கருணையினால் கணநேரத்தில்

குறைவுதரும் பேதமதி அனைத்தும் நீங்கி

சருவமுமே பிரம்மமென்னும் நிச்ச யத்தை

சாலவுமே திடமாக சார்ந்தோ மந்தோ

பரவிய இவ்வுரமான நிச்ச யத்தால்

பரமான எம்மிடை யாம் சாந்தமாகி

விரவுபவ துக்கங்கள் அனைத்தும் நீக்கி

விமலபர மாநந்தம் அடைந்தோ மந்தோ!

கருத்து:

ஹே தயாநிதி!

எம் பேதமதியின் கற்பனைகள் ஒழிந்து எம்மிடையே யாம் சாந்தமாகி அனைத்து துக்கங்களும் நீங்கி பிரம்மானந்தம் அடைந்தோம்!

பாடல் : 114

இதுவரையில் அஞ்ஞான பகையால் கெட்டோம்

இன்றுனது கருணையினால் அபயம் பெற்றோம்

இதுவரையில் மனதென்னும் பகையால் கெட்டோம்

இன்றுனது கருணையினால் மஹத்தே யானோம்

இதுவரையில் கருமியெனும் மதியால் கெட்டோம்

இன்றுனது கருணையினால் கலக்க மற்றோம்

இதுவரையில் ஜீவனெனும் மதியால் கெட்டோம்

இன்றுனது கருணையினால் சிவமே ஆனோம் !

கருத்து:

ஹே பராத்பரா!

இந்த நிமிஷம் வரை எம்மிடம் இருந்த
அறியாமை இருள் அகன்று, உமது அபயம் பெற்று,
கற்பனை மனம் இறந்து, அது மஹத்தாகி,
லோபம் நிலைமாறி, கலக்கம் இல்லாமல்,
ஜீவன் என்ற நிலைமாறி, சுத்த சிவம் ஆகி
சுகமாக இருக்கின்றோம்!

பாடல் : 115

யாம் முன்னம் அறிவிலனாய் அலைந்து நின்றோம்

யாம்இன்று ஆன்மா வென்றறிந் தோமானோம்

யாம்முன்னம் தேகமென தியங்கி நின்றோம்

யாம்இன்று திருக்குரு வென்றறிந் தோமானோம்

யாம்முன்னம் சித்தமெனச் சலித்து நின்றோம்

யாம்இன்று சின்மய மென்றறிந் தோமானோம்

யாம்முன்னம் சிதாபாச னெனவே நின்றோம்

யாம்இன்று சித்பர மென்றறிந் தோமானோம்!

கருத்து:

குருதேவா!

சற்று முன்பு கூட அறிவிலியாய் இருந்தோம். இப்போது ஆத்மாவாகவே இருக்கிறோம்.

இந்த பிண்டத்தை நம்பி இருந்தோம். இப்போது அதை சாட்சியாக காணும் நிலை பெற்றோம்.

உடல் உலகமாக சிந்தித்த சித்தமானது சிந்தனை அற்றதால் சின்மயமாகி விட்டது.

சித்தத்தின் ஆபாசத்தில் மயங்கிய யாம் சித்பர சொரூபமாகி விட்டோம்.

பாடல் : 116

நினதருளால் மனதிலுள்ள சந்தேகங்கள்

நிகிலமுமே நிமிஷத்தில் நீங்கிற் றன்றோ!

நினதருளால் மனதிலுள்ள பவ பாசங்கள்

நிகிலமுமோர் நிமிஷத்தில் நீங்கிற் றன்றோ!

நினதருளால் ஜீவபர ஜகங்க ளென்ன

நிகழுமயல் நிகிலமுமே நீங்கிற் றன்றோ!

நினதருளால் நிகிலமுமே பிரம்ம மென்னும்

நிச்சலமாம் நிச்சயமே நிலைத்த தன்றோ!

கருத்து:

ஹே குருதேவா!

உமது கிருபையால் பற்பல வருஷங்களாக இருந்த சந்தேகம் என்னும் பிசாசு ஒரு நிமிஷத்தில் நீங்கி விட்டதே!

ஜகத்ஜீவ ஈஸ்வராதிகளாக தோற்றிய பிரேமை ஒரு வினாடியில் நீங்கி அசைவு இல்லாத ஸ்திரத்தன்மை பெற்றோம்.

பாடல் : 117

நிகிலமெனத் தோற்றுவதும் சித்தம் தானே
நினதருளால் சித்தமதே பிரம்ம மாயிற்று
அகிலமுமே பிரம்மமதாம் அதுநாம் என்னும்
அகண்டபர பாவனையே செய்திங் கத்தால்
சகலமென்றும் நாம்என்றும் பேதம் நீங்கி
சலனமில்லா அகண்டபர நிஷ்டை கூடிப்
பகரவொண்ணாப் பவபாசம் அனைத்தும் தள்ளி
பங்கமில்லா பரப்பிரம்மம் ஆனோ மந்தோ!

கருத்து:

ஹே கருணாகரா!

உலகமாகவும், அனைத்து வஸ்துக்களாகவும் தோற்றியது எம் சித்தம்தானே. உம் கருணா உபதேசத்தினால் அடுத்த வினாடி அது மாறிவிட்டதே!

''அகம் பிரம்மம், பிரம்மம் அகம்''

என்ற உம் உபதேசத்தால் சகல பேதமும் நீங்கி அகண்டானந்த நிலையில் அனைத்தும் யாமாக உணர முடிகிறது.

பாடல் : 118

தூலமெனத் தோன்றியதாம் உடலும் காணோம்

சூட்சுமமெனத் தோன்றியதாம் உடலும் காணோம்

மூலமெனத் தோன்றியதாம் உடலும் காணோம்

மோகமெனத் தோன்றியதாம் ஒன்றும் காணோம்

காலமொடு தேசமுதல் எவையும் காணோம்

கற்பிதமாய் தோன்றியதோர் அணுவும் காணோம்

சாலவுப சாந்தமதாய் சலன மின்றிச்

சன்மயமாம் பரப்பிரம்மம் ஆனோ மய்யா!

கருத்து:

ஹே குருபரா!

தூலம் என தோற்றியது ஒன்றும் காணோம்!

மனோ வடிவில் சூட்சுமமென தோற்றியதும் காணோம்!

அந்த மோகவலையில் சிக்கிய மனதையும் காணோம்!

முக்காலத்தையும், எத்தேசங்களையும், ஆங்காங்கு கற்பனையாக தோன்றிய வஸ்துக்களையும் காணோம்!

அனைத்தும் பிரம்மமாக எம் வடிவமாகவே உணர்கிறோம்!

பாடல் : 119

இருமையெனப் பிரம்மமல்லா தெவையும் காணோம்

இருப்பதெல்லாம் பரப்பிரம்ம வடிவாய்க் கண்டோம்

ஒருபொருளும் பிரம்மமல்லால் அயலாய்க் காணோம்

உள்ளதெல்லாம் பரப்பிரம்ம வடிவாய்க் கண்டோம்

சருவமெனப் பிரிதாகச் சிறிதும் காணோம்

சகலமுமே பரப்பிரம்ம வடிவாய்க் கண்டோம்

குருவரா! அப்பரப்பிரம்மம் யாமே ஆனோம்

குறைவற்ற நினதருளின் மகிமை என்னே!

கருத்து:

இரண்டென்பதற்கு இடமே இல்லை.
ஒரு பொருளும் பிரம்மத்திற்கு அயலாக இல்லை.
பிரித்துச் சொல்லவோ பார்க்கவோ இடமும் இல்லை.
எங்கும் ஏக சிதாகாயமான யாமாகவே இருக்கிறோம்!

பாடல் : 120

ஆசிரியா ! நீ அருளும் உபதேசத்தால்

ஆவரணம் விட்ஷேபம் அனைத்தும் நீங்கி

சாசுவத சுபாவமதாய் சலியாச் சித்தாய்

சதானந்த கனமாகிச் சகஜான் மாவாய்

பேசவொண்ணாப் பேரொளியாய் பிரிவில் லாதாய்

பெரிதுக்கும் பெரிதாகிப் பிரம்மான் மாவாய்

ஈசன்முதல் யெவையுமில்லா அகண்ட மான

ஏகசிதா காயப்பரப் பிரம்ம மானோம்!

கருத்து:

ஹே குருதேவா!

உம் உபதேசத்தால் நாம ரூபத்தோடு கூடிய ஆவரண மயக்கம் இல்லை. அது, இது, எனது ,உனது என்ற விட்ஷேப கலக்கமும் இல்லை.

எங்கும் பேரொளியாய் எமக்கு அயலில்லாததாய் சிருஷ்டி கர்த்தாக்களும் யாமாக ஒன்றுபடுத்தபட்ட பிரம்மானந்த நிலை பெற்றுவிட்டோம்!

பாடல் : 121

ஆசிரியா! நீ அருளிச்செய்த வண்ணம்
அனிசமகம் பிரம்மாஸ்மி யென்பதாக
நேசமுடன் நிரந்தரமாய் தியானம் செய்து
நிகிலமனோ விகற்பமுமே நீங்கி ஞேயை
சாசுவத சொரூபத்தில் நிருவிகற்ப
சமாதிநிலை பெற்றவனுய்ச் சாந்தனாகிப்
பேசவொணா பரப்பிரம்ம போதம் பெற்று
பெருமைமிகும் பிராமணனும் ஆனோ மய்யா!

கருத்து:

குருதேவா!

நீ அருளிய ''அனிசமகம் பிரம்மாஸ்மி'' (அது நீயே) என்ற அனுபவ வசனத்தால் எம் மனோ கற்பனை குற்றவுணர்வுகள் நீங்கி, எம் யதார்த்த சொரூபத்தில் நிலைத்து சொல்லாலும் செயலாலும் விளக்க முடியாத பரப்பிரம்ம போதம் பெற்று யாம் பிராமணன் ஆனோம்!

பாடல் : 122

பின்னமறக் கருணையினால் நீ உரைத்த

"பிரக்ஞானம் பிரம்மம்" முதல் வாக்கியார்த்தம்

மன்னும்வண்ணம் நன்றாக மனதில் கொண்டு

மாசறவே மற்றதனை மனனம் பண்ணி

அன்னதனைப் பின்னையுமே அநுசந் தானித்து

அஞ்ஞான சந்தேக விபரீதங்கள்

மன்னியிடா அகண்டார்த்த போத மேவி

மகிழ்சீவன் முக்தனும் யாம் ஆனோமய்யா!

கருத்து:

ஹே பிரபோ!

பின்னப்படுத்தாமல் உம் கருணையினால் நீ உரைத்த "பிரக்ஞானம் பிரம்மம்" என்ற வாக்கியத்தினால் பிரம்ம பிரக்ஞையினால், ஆத்மப் பிரக்ஞையினால் எம்மை கரைத்து அறியாமை, விபரீத தோற்றம், எண்ணம் அனைத்தும் ஒழிந்து ஜீவன்முக்தன் நிலை பெற்றுவிட்டோம்!

பாடல் : 123

சிரவணமே முதலியதின் அப்யா சத்தால்

சிறுமைதரும் தேகாத்ம புத்தி நீங்கி

பெருமைமிகும் பிரம்மான்ம புத்தி மேவி

பின்பந்தப் புத்தியுமே இழந்தோ னாகி

கருத வொண்ணா அகண்டான்ம போதம் பெற்று

கர்த்துருத்வ முதலான பந்தம் தீர்ந்து

நிரதிசய ஆனந்தம் அனுபவித்து

நிகழ்சீவன் முக்தனும் யாம் ஆனோமய்யா!

கருத்து:

ஹே தயாநிதே!

''அகம் பிரம்மம், பிரம்மம் அகம்''

என்ற உம் உபதேசத்தால் தேகமே ஆத்மா என மூடமாக நம்பியிருந்த யாம் அதை ஒழித்து பிரம்மாத்ம புத்தி நிலைத்து எம் சாதனையினால் அந்நிலையும் மறைந்து அகண்டான்ம நிலை பெற்று ஆனந்தமாக சுகமாக நலமாக இருக்கிறோம்.

பாடல் : 124

குறைவின்றி நிறைவின்றி குற்ற மின்றிக்

குணம் குறிகள் முதலியவை யெவையுமின்றி

மறைவின்றி தெரிவின்றி மனது மின்றி

மனோமயமாய் மயக்கங்கள் அனைத்து மின்றி

பிறிதின்றி தனதின்றி பிரிவொன் றின்றிப்

பேதமுறும் எப்பொருளும் வொன்று மின்றி

அறிவொன்றே வடிவான பிரம்ம மாக

அமைவுற்ற எம்மகிமை யென்சொல் வோம்யாம்!

கருத்து:

ஹே தயாநிதி!

இப்போது யாம் எந்த குறைவு, நிறைவு இல்லாமல் குணம், குறிகள் இல்லாமல் மறைத்தலும், விளக்கலும் இல்லாமல், மனோ வியாதியான எந்த மயக்கமும் இல்லாமல், எம்மில் யாம் பிரிவில்லாமல் அது, இது, உனது, எனது என்ற பிரிவில்லாமல் எந்த பேத உணர்வும் இல்லாமல் அறிவு சொரூபமாக யாம் யாமாகவே இருக்கிறோம்.

பாடல் : 125

நினதருளால் யாம் பெற்ற அனுபவத்தை

நிகழ்வுறவே இவ்வண்ணம் நிகழ்த்த லானோம்!

கனகருணா வாரிதியே யாம் உமக்கு

கைம்மாறு செய்திட இங்கொன்றும் இல்லை

மனதுடனே எமதுடலை உமக்களித்தோம்

மற்றதனை நிமிடத்தில் நீறு செய்தாய்

அனகயெம தான்மாவை நினக்க ளித்தோம்

அதனையும்நின் ஆன்மாவே ஆக்கிக் கொண்டாய்!

கருத்து:

ஹே கருணாகரா!

உமது கிருபையினால் யாம் பெற்ற சுய அனுபவத்தை சொன்னோம்.

இப்படி எம்மை ஆக்கிய உம் கருணைக்கு யாம் எதை கைம்மாறு செய்வோம்.

எம் உடலைக் கொடுத்தோம். அதை நிமிஷத்தில் (நீறு) மயமாக்கி விட்டாய்.

எம் ஆத்மாவை உமக்கு கொடுத்தோம். அதையும் உம்முடையது ஆக்கிக் கொண்டாய். இனி கொடுப்பதற்கு எதுவும் இல்லையே.

பாடல் : 126

இனியெதனை கைம்மாறு செய்வோம் ? எல்லாம்

இருமையில்லா நினதுநிஜ சொரூபம் தானே

அனியமில்லா நீயாமாய் யாமே நீயாய்

அமர்கின்ற ஐக்கியமாம் ஆழியின் கண்

அனியுமகம் பிரம்மாஸ்மி ஞானத் தாலே

யாம்மூழ்கி வொன்றாகக் கலந்தோமன்றோ

தனிவுருவாய் தான்தானாய் தனித்த இந்த

தகைமைதனில் தமக்கயலோ ரணுவும் உண்டோ?

கருத்து:

ஹே பிரபோ!

இனி எதைக் கொடுப்போம்?

இரண்டுபட்ட நிலை இல்லையே. அப்படி இருந்தால் அல்லவோ ஒன்றை யாம் கொடுக்க அதை நீ வாங்க முடியும்.

''நீயே யாம், யாமே நீ''

''நாம் இரண்டும் ஒன்றானால் தேனின் சுவையது போல் திகட்டாய் பராபரமே'' என்ற நிலை பெற்றுவிட்டோமே!

நீ சமுத்திரம்; யாம் அதில் தோன்றிய ஓர் உப்பு பதுமை. யாம் உம்மில் கலந்து, கரைந்து விட்டோம்.

இதை விளக்கவும் முடியவில்லையே!

பாடல் : 127

ஆதலினால் யாம் கைம்மாறு அளிப்பதற்கும்
அதனையடைந்து எங்கணும்நீ போவதற்கும்
ஏதுவில்லை யெப்போதும் எவ்விடத்தும்
இருப்பதெல்லாம் ஏகசிதா காயம்தானே
ஓதியவாறு ஓரணுவும் அயலில்லா ததால்
ஒன்றினைநீ உபதேசம் செய்வதற்கும்
ஈதிதனை யாம் இனிமையுடன் கேட்பதற்கும்
இடமில்லை இவ்விசித்ரம் என்னே ஐயா!

கருத்து:

ஹே தயாஸாகரா!
யாம் எதைக் கொடுப்போம்?
அதை நீ எப்படி வாங்குவாய்?
வாங்கி நீ எங்கு செல்வாய்?
இப்படி கேவலமான நிலை ஆகி விட்டோமே?
உமக்கும், நமக்கும் அயல் இல்லாத தன்மையினால், நீ எதை சொல்வாய்? யாம் எதைக் கேட்போம்? என்னே விசித்திரம்!

பாடல் : 128

சத்குருவாய் அருளியிடும் நீயும் இல்லை
சத்சீடனாகி யுள்ள யாமும் இல்லை
முக்குணமாய்த் தோன்றியதோர் பிரிவும் இல்லை
மூலமதாம் அவித்தையில்லை மாயை யில்லை
துர்க்குணமாய்த் தோன்றியதோர் ஜகத்தும் இல்லை
தொடர்புற்ற ஜீவேஸ்வர் யாரும் இல்லை
நிர்க்குணமாம் பரப்பிரம்ம சொரூபம் ஒன்றே
நீக்கமற நிலைபெற்று நிகழ்ந்த தன்றோ!

கருத்து:

ஓ எம் ஐயனே!

ஸ்ரீ சத்குருவான உன் தோற்றமும் இல்லை.

சத்சீடனான எம் தோற்றமும் இல்லை.

நம்மை பிரித்த முக்குணத்தையும் காணோம்.

இக்குணத்தை உண்டு பண்ணிய மஹாமாயையும் காணோம்.

இந்த மாயையை வைத்து விளையாடியதாக சொல்லிய பஞ்ச கர்த்தாக்களையும் காணோம்.

என்ன விசித்திரம் ஐயா!

பாடல் : 129

இன்றடியேன் உம்மை நோக்கி வணங்குவோமேல்

இரண்டுபடும் ஆதலினால் வணங்கக் கூடா (து)

அன்றி எமைநோக்கி யாம் வணங்குவோமேல்

அணுகுபலன் இலாமையினால் அதுவும் கூடா (து)

என்றும் வொருவடிவான உம்மை நோக்கி

இருமையுற யாம் இன்று வணங்குவோமேல்

நின்ற எம்மை அஞ்ஞானியென நீசொல்வாய்

நிர்மலமாம் தன்னிலையில் இருமை யுண்டோ?

கருத்து:

ஹே சத்ய சொரூபா!

இந்நிலையில் யாம் உம்மை குறித்து வணங்கவும் இயலவில்லை. வணங்கினால் இரண்டுபடும். ஆகவே நீரும் வணங்க முடியாது; யாமும் வணங்க இயலாது.

வணக்கத்தை ஏற்பது யார் என்றாகி விட்டதே? இதையும் மீறி யாம் உம்மை வணங்கினால் எம்மை அஞ்ஞானி என நீர் சொல்வீர்.

போதும்! போதும்!! போதும்!!! என்ற நிறைவை பெற்று விட்டோம்.

பாடல் : 130

அஹோகுருவின் மஹிமையினையென் சொல்வோம் யாம்

அஹோநூலின் மஹிமையினையென் சொல்வோம் யாம்

அஹோஞான மஹிமையினையென் சொல்வோம் யாம்

அஹோஞானி மஹிமையினையென் சொல்வோம் யாம்

அஹோசாது மஹிமையினையென் சொல்வோம் யாம்

அஹோசாந்தி மஹிமையினையென் சொல்வோம் யாம்

அஹோபிரம்ம சுகமஹிமையென் சொல்வோம் யாம்

அஹோஎமது சுகமஹிமையென் சொல்வோம் யாம்!

கருத்து:

அய்யனே! கிருபாஹரா! பராத்பரா! கருணைக் கடலே!
என் சொல்வோம் உம் மஹிமையை!
ஆகா!ஆகா!! சத்குருவின் பெருமையை என் சொல்வோம்!
ஆகா!ஆகா!! இந்த நூலின் மஹிமையை என் சொல்வோம்!
ஆகா! ஆகா!! ஆத்மஞான மஹிமையை என் சொல்வோம்!
ஆகா!ஆகா!! அனுபவ ஞானி மஹிமையை என் சொல்வோம்!
ஓகோ!ஓகோ!! ஓர் சாது மஹிமையை என் சொல்வோம்!
ஓகோ!ஓகோ!! மஹாசாந்தி மஹிமையை என் சொல்வோம்!
ஓகோ!ஓகோ!! பிரம்மசுக மஹிமையை என் சொல்வோம்!
ஓகோ!ஓகோ!! எம் ஆத்மசுக மஹிமையை என் சொல்வோம்!

பாடல் : 131

தந்தைமுதல் பந்துவெல்லாம் அனந்த தேகம்

தருவதல்லால் அனாதிபவ பந்தம் தீர்க்கார்

சிந்தையினால் ஆய்ந்திடில் அப்பந்து வெல்லாம்

சிறுமைதரும் சத்துருவே ஆகிநிற்பர்

அந்தமில்லா அருள்வடிவாம் குருவோ வென்றால்

அகண்டபர ஞானத்தை அருளால்நல்கி

தொந்தமதாம் அனாதிபவ பந்தம் எல்லாம்

துப்பறவே நன்றாய் துடைத்துக் காப்பன்!

கருத்து:

குழந்தைகளே!

உங்கள் தூலத்தின் மாதா, பிதா என்பவர்கள் அனேக உடம்புகளை கொடுப்பார்களேயன்றி ஜனனமரணத்தை தீரார்.

உங்கள் பந்து, மித்திரர்களோ துன்பம் தரும் சத்துருவே அன்றி நலம் கொடுப்பவர்கள் அல்ல.

ஆதி அந்தம் இல்லா ஸ்ரீ சத்குருவோ பரஞானத்தை (பிறவாநிலை) தந்து, பிறவிப்பிணி அறுத்து, சொந்த பந்தத்தை துடைத்து (பிறவி களையெடுத்து)

''யாம் நீ, நீ யாம்''

என்ற நிலை கொடுத்து பிரம்மானந்தத்தில் உங்களை கரைத்து விடுவார்!

## நிதாகன் வைராக்கியம்

பாடல் : 132

குருதேவா!

அகிலவித உபாதியுமில் விதேக முக்தி
அடையுமளவு அஞ்ஞான லேசத் தாலே
வெகுவிதமாம் பிராரப்தம் தொலையும் மட்டும்
விதவிதமாம் துவைதத்தின் ஆபாசங்கள்
நிகழினுமே நிச்சலமாம் ஜீவன்முக்தி
நிலையிலுள்ள யாம் என்றும் சலித்திடாமல்
இகழ்வறவே நேரிட்ட போகம் துய்த்திங்கு
எம்மிடையாம் இன்பமுற இசைந்து நிற்போம்!

கருத்து:

ஹே பரம்பொருளே!

தங்கள் கிருபையினால் கிடைத்த இந்த ஆத்ம ஞானத்தினால் ஜீவகளை களைந்த ஜீவன்முக்தி நிலை பெற்றுவிட்டோம்.

பிராரப்தம் முடியும் பரியந்தம் அதாவது விதேகமுக்தி அடையும் வரை தூல தோஷங்கள் இந்த உடம்பை பீடிக்கும்.

அந்த காலங்களில் சற்றும் சலிக்காமல், மயங்காமல், பயம் இல்லாமல் தூலக்கணக்கை முடித்துக்கொண்டு எம் நிலையில் கருங்கல்லை போல் அசையாமல் இருப்போம் என உறுதி கூறுகிறோம்.

பாடல் : 133

புகல்ஜீவன் முக்தர்க்கும் பிராரப்தத்தால்

பூஷணமும் தூஷணமும் எங்கும் உண்டே

அகமேவும் ''அகம்பிரம்ம'' நிச்ச யத்தால்

அவர்ஜீவன் முக்தரலால் மற்றோர் செய்யும்

வெகுவான பூஷண தூஷணங் களாலே

விமலமதாம் நிலைபெற்ற அன்னோர்க் கென்றும்

இகழ்வான தெவையுமில்லை யெனும் உரத்தோடு

எம்மிடையாம் இன்பமுற இசைந்து நிற்போம்!

கருத்து:

ஓ எம் ஐயனே!

ஜீவன்முக்தியை பெற்ற யாம்,

பிராரப்த தூலத்தை சுமந்து திரியும் யாம்

''பேய்போல் நடந்து, பிணம்போல் கிடந்து பெண்ணை தாய் போல் நினைத்து தவமுடிப்பதெக்காலம்'' என்ற மூதுரைப்படி இருப்போம். அப்பொழுது புகழுரையும் இகழுரையும் வந்தே தீரும். அக்காலத்தில்

''அகம் பிரம்மம், பிரம்மம் அகம்''

என்ற நிலையில் அணுவும் வழுவாமல் அனைத்தையும் ஆனந்தமாக ஏற்றுக் கொண்டு காலாதீதமான அதுவாகவே இருப்போம் என உறுதி கூறுகிறோம்.

பாடல் : 134

குருதேவா! நின்கருணையினால் யாம் இப்போது

மகிழ்ஜீவன் முக்திநிலை மருவா நின்றோம்

பேதமுறும் பிராரப்தம் உள்ள மட்டும்

பிசகறவே "அகம்பிரம்ம" நிச்சயத்தை

சாதகமாய் சந்ததமும் சாதிப்போனாய்

சங்கற்ப விகற்பங்கட்கு இடம் கொடாமல்

ஆதிமுடி ஒன்றுமில்லா அகண்ட மான

ஆன்மாவில் அநவரதம் அமர்ந்து நிற்போம்!

கருத்து:

ஹே குருதேவா!

ஜீவன்முக்தி நிலை பெற்ற யாம்

"அகம் பிரம்மம், பிரம்மம் அகம்"

என்ற எம் சுயபாவனையில் இருந்து சற்றும் நிலை பிறழாமல் எந்த கற்பனைக்கும் இடம் கொடாமல், மஹாசாந்தியாக, மஹாமௌனியாக ,அறிவு சொரூபமாகவே இருப்போம் என உறுதி கூறுகிறோம்.

பாடல் : 135

ஆதலினால் தந்தையும்நீ தாயும் நீயே

அதிசயமாம் மற்றுமுள்ள பந்து நீயே

சாதகமாம் சத்குருநீ சகாவும் நீயே

சகலமுமே நீளன்று வணங்கி யேத்தி

சீதளமாம் மனதுடனே பவதா பங்கள்

சிறிதுமில்லாச் சின்மாத்ர நிஷ்டை கூடி

ஆதிமுடி வொன்றுமில்லா அகண்டானந்த

ஆழியினில் அசஞ்சலமாய் அமர்ந்தோம் யாமும்!

கருத்து:

ஹே குருதேவா!

ஹே பரம்பொருளே! ஹே சத்திய சொரூபா!

அனைத்தும் நீயே! எம் தந்தையும் தாயும் நீயே. எமக்குள்ள உறவு, சுற்றும் அனைத்தும் நீயே. இனி விளக்க வார்த்தைகள் இல்லை.

அகண்டானந்தமே எம்சொரூபம்!

இரண்டென்றான்!
இரண்டும் ஒன்றென்றான்!
ஒன்றென்றும் இல்லை என்றான்!
உணர்வு தெரியவில்லையே!

பாடல் : 136

சத்தியசித் சுககனமாம் குருவே போற்றி!

சலனமில்லா சாந்தபர குருவே போற்றி!

நித்திய நிர்க்குணமான குருவே போற்றி!

நிரஞ்சனமாய் நின்றபர குருவே போற்றி!

சுத்தபர வெளியான குருவே போற்றி!

சூட்சுமமாய் நின்றபர குருவே போற்றி!

அத்வைத பூரணமாம் குருவே போற்றி!

அகண்டமதாம் சத்குருவே போற்றி! போற்றி!!

பாடல் : 137

அகில அதிஷ்டானபர சொரூபம் போற்றி!

அனைத்துமில்லா அத்வைத சொரூபம் போற்றி!

துகளணுகாத் துரியபர சொரூபம் போற்றி!

துரியத்தும் அதீதபர சொரூபம் போற்றி!

அகமருவா அகண்டபர சொரூபம் போற்றி!

ஆன்மாவுக் கபின்னபர சொரூபம் போற்றி!

நிகரிலதாய் நின்றபர சொரூபம் போற்றி!

நீக்கமற நிறைந்தபர சொரூபம் போற்றி!!

பாடல் : 138

சற்போத சுககனமாம் சொரூபம் போற்றி!

சலனமில்லா சாந்தபர சொரூபம் போற்றி!

தற்போத சூனியமாம் சொரூபம் போற்றி!

தன்மயமாய் தனித்தபர சொரூபம் போற்றி!

கற்போல நிச்சலமாம் சொரூபம் போற்றி!

களங்கமில்லா நிஷ்களமாம் சொரூபம் போற்றி!

எப்போதும் இருமையில்லா சொரூபம் போற்றி!

ஏகமதாம் பரப்பிரம்ம சொரூபம் போற்றி!

பாடல் : 139

சத்திய ஞானானந்த சொரூபம் போற்றி!

சகலபரி பூரணமாம் சொரூபம் போற்றி!

நித்திய ஞானானந்த சொரூபம் போற்றி!

நிரஞ்சன நிர்க்குணமான சொரூபம் போற்றி!

இத்துவைத லேசமில்லா சொரூபம் போற்றி!

ஏகசிதா காயபர சொரூபம் போற்றி!

அத்வைத மானபர சொரூபம் போற்றி!

அகண்டமதாம் பரசொரூபம் போற்றி போற்றி!!

வேறு

தேசிகன் தெரிவித்த திறப்படி
தீரமாய் நிதித்யாசம் புரிந்ததால்
ஈசன் நல்லருள் பெற்றவர் முக்தியை
எய்தலா மெனமுன்பு விளம்பி மற்றும்
ஏசிலா இந்த நூலின் மகத்துவம்
யாவும் ஓதியிதனை முடித்திடல்
ஆசிலானந்த தாண்டவம் ஆடும்நம்
அம்பிகேசன் அகண்ட சொரூபமே!

கருத்து:

இதுவரை உபதேசித்த ஆழ்ந்த கருத்துக்களை எவனொருவன் சிரத்தையுடன் ஏற்று நிதித்யாசனம் (அனுபவ நிலையில்) செய்கின்றானோ அவன் அதுவாகவே ஆகுவான் என உறுதி கூறி இறைசொரூபமும், குருசொரூபமும் இணைந்த பரசொரூபமாக வாழ்த்தி ஆசி கூறுகிறோம்!

## முடிவுரை

குழந்தைகளே !

உங்கள் கவனக்குறைவினால், உங்கள் மனகற்பனையினால் தோன்றிய அக்ஞான விருக்ஷம் அழிக்கப்பட்டால் ஒழிய, இந்த ஆத்மஞான சம்பத்தை நீங்கள் பெற முடியாது. முதலில் கிளைகளை வெட்டி விடவேண்டும்.

அதாவது காமம், குரோதம் (பேராசை, வஞ்சினம்) இவைகளை தவிர்க்க வேண்டும். இந்த விருக்ஷத்திற்கு நான் என்ற அஹங்காரம் ஜலம், என்னுடையது என்ற அபிமானம் உரம்.இந்த இரண்டையும் விட்டுக்கொண்டே இருந்தால் கிளைகள் வெட்ட வெட்ட தளிர்க்கும். ஆகவே இந்த இரண்டையும் மனதளவில் இல்லாமல் பண்ணவும். எந்த வினாடியும்

''நாம் அதுவே,அதுவே நாம் ''

என்ற உணர்வோடு இருந்து அனைத்து எண்ணங்களையும் தவிர்க்கவும். நீங்கள் அதுவாகவே இருக்க எம் பரிபூரண ஆசிகளை வழங்குகிறோம்.

## *பிரார்த்தனை*

ஹே பரம்பொருளே !

ஸ்ரீசத்குரு சிஷ்யர்களாகிய எங்களை சிரேயசுடன் இருக்க அருள்வாயாக! எங்களுடைய ஸ்ரீஆன்ம நாட்ட முயற்சிக்கு முழு பலத்தையும் கொடுப்பாயாக! எங்கள் மனச்சோர்வை அகற்றி தீரமுடன் நாங்கள் உழைக்க அனுக்ரஹிப்பாயாக!

அசத்தான இந்த உடல் உலக வாழ்க்கையிலிருந்து விடுபட்டு அதாவது பற்று, பந்தம், உறவு இவைகளிலிருந்து வரும் ஆசை, கோபம், ஆத்திரம், அவசரம், வேகம், விரகதாபம், பயம், துக்கம் இவைகளை நீக்கி சத்ய பாதையில் எங்களை நடத்துவாயாக !

சபலம், சலனம், சந்தேகம் இவைகளால் தோன்றும் இருள்மயமான இந்த உலகைவிட்டு உறுதி, அமைதி, சாந்தி, மௌனம் ஆகிய ஆனந்த உலகிற்கு எங்களை அழைத்துச் செல்வாயாக!

எம பயத்தைப் போக்கி அதாவது இன்னொரு கர்ப்பத்தை நாங்கள் அடையாமல் காலாகாலம் கடந்த அந்த ஒன்றாக எங்களை ஆக்குவாயாக!

ஆசையால் வரும் மோகத்தையும், மோகத்தால் வரும் கோபத்தையும், கோபத்தால் வரும் அறிவு மயக்கத்தையும், அறிவு மயக்கத்தால் வரும் ஆத்ம நாசத்தையும், அந்த ஆத்ம நாசத்தினால் நாங்களும் நாசமாகாதபடி எங்களை காப்பாற்றி அருள்வாயாக!

குருவடி சரணம்! திருவடி சரணம்!

***எல்லாம் நீ ! எல்லாம் நீ !! எல்லாம் நீ !!!***

## நிர்க்குண அஷ்டோத்திரம்

ஓம் அஸ்ய ஸ்ரீ ஜகத்குரு சங்கராச்சாரிய
ஸ்தாபித கயிலாச சம்பத்கிரி பிரம்மபீட
பரம்பரை அகண்ட சச்சிதானந்த பர
பிரம்ம சொரூப ஸ்ரீமத் அமலானந்த
சுவாமி பாதாரவிந்த வில்வபத்திர
நானாவித புஷ்ப நிற்குண அஷ்டோத்திர பூஜாங்கரிஷ்யே:

----

1. ஓம் அச்சுதாநந்தாய நம:
2. ஓம் நிஜாநந்தாய நம:
3. ஓம் கங்காராமாய நம:
4. ஓம் ராஜாநந்தாய நம:
5. ஓம் அமலாநந்தாய நம:
6. ஓம் லக்ஷ்மணானந்தாய நம:
7. ஓம் சுந்தராநந்தாய நம:
8. ஓம் சப்தகிரியாய நம:
9. ஓம் துரைராஜாய நம:
10. ஓம் மாணிக்காய நம:
11. ஓம் பரிபூரணாநந்தாய நம:
12. ஓம் நரசிம்மாய நம:
13. ஓம் கேசவானந்தாய நம:

ஞானஸ்வரூபாய நம:
ஆனந்தஸ்வரூபாய நம:
ஆத்மஸரூபாய நம:
கூடஸ்தாய நம:
அகண்டாய நம:
அபரச்சின்னாய நம:
ஆதியே நம:
அநாதியே நம:
காரணாய நம:
அகாரணாய நம: 10
அஹேயாய நம:
அகர்த்தாய நம:
அகர்மணாய நம:
அக்ரோதாய நம:
அவ்யாகிர்தாய நம:
அவாங்மநோகோசராய நம:
அசங்சாய நம:
அசரீராய நம:
அக்ஷராய நம:
அசலாய நம: 20
அச்சுதாய நம:
அசம்சாரியாய நம:
அணுவே நம:
ஸ்தாணுவே நம:
அத்வைதாய நம:
அநந்தாய நம:
அநாவிர்தாய நம:
அநாதிமுக்தாய நம:
அநுபாதேயாய நம:
ஏகஸ்வரூபாய நம: 30
அநேகஸ்வரூபாய நம:
அபரோக்ஷாய நம:
அபயாய நம:
அபேதாய நம:
அப்ரவிர்தாய நம:
அப்ராணாய நம:
அப்ரமேயாய நம:
அபோக்தாய நம:
அமநஸாய நம:
அமிர்தாய நம: 40
அலோபநாய நம:
உந்நதாய நம:
ஏகாத்மநே நம:
சர்வாத்மநே நம:
சர்வக்ஞாய நம:
சர்வகதாய நம:

சர்வாகாராய நம:
சர்வாபாவாய நம:
சர்வகாரணாய நம:
சர்வசமநாய நம: 50
சர்வாதாராய நம:
சர்வாதிஷ்டாய நம:
சத்தேயாய நம:
சத்தியாய நம:
சச்சிதாநந்தாய நம:
சாக்ஷியாய நம:
சாந்தாய நம:
சிந்மாத்ராய நம:
சிவாய நம:
சூந்யாய நம: 60
மகாசூந்யாய நம:
ஸ்வயம்பிரகாசாய நம:
ஸ்வப்பிரகாசாய நம:
சுத்தாய நம:
புத்தாய நம:
சுயம்புவே நம:
க்ஷேத்திரக்ஞாய நம:
திர்க்காய நம:
திர்ஸ்யாய நம:
நாநாரூபாய நம: 70
நிர்விகாராய நம:
நிஷ்கிரியாய நம:
நிர்ச்சம்பந்தாய நம:
நிர்லேபாய நம:
நிந்மலாய நம:
நிரூபாதிகாய நம:
நிரவயவாய நம:
நிர்விகல்பாய நம:
நிர்க்குனாய நம:
நிராகாராய நம: 80
நிரீசுவாராய நம:
நிரிந்திராய நம:
நிர்ஜ்ஜீவாய நம:
நிஷ்பிரகிர்தியே நம:
நிர்விசேஷாய நம:
நிஷ்ப்ரபஞ்சாய நம:
நிரஞ்சநாய நம:
நித்தியாய நம:
நித்யாநந்தாய நம:
நித்யமுத்தாய நம: 90
நிராதாராய நம:
நிர்விஷயாய நம:
நிர்த்தோஷாய நம:
துரியாய நம:
துரியாதீதாய நம:
பரமார்த்தாய நம:
பரப்பிரஹ்மாய நம:
பிரத்தியக்ஷாய நம:
புராணாய நம:
புராதநாய நம: 100
புரணாய நம:
மகத்தாய நம:
முக்தாய நம:
வஸ்துவாய நம:
விபுக்தாய நம:
அதோமுக்ய நம:
ஸ்ரீசற்குருவே நம:
சம்பூர்ணசமாப்தா 108

ஓம் - தத் - ஸத்

முற்றிற்று.



## ஸ்ரீமத் கேசவானந்த சுவாமிகள்

தன்னை அறிந்திடும் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பர்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனரு ளாலே

- திருமந்திரம்